# ஸ்ரீராம கானாமிருதம்

## (சுந்தரகாண்டம்)

— இசைநூல் —



ராமாயண கலாமணி. S. V. ராமஸ்வாமி, போஸ்ட்மாஸ்டர்,
வந்தவாசி.

சென்னை விவேகாநந்தர் கல்லூரித்
தலைமைத் தமிழ்ப்பேராசிரியர்
ஸ்ரீமான் C. ஜெகந்நாதாச்சாரியார் அவர்களால்
M. A. (Hist), M. A. (Tamil), L. T., P. O L., Dipl. Geog., Vidvan.
பரிசோதித்து அமைக்கப்பட்டது.

இசையமைப்பு :- அண்ணாமலைச் சர்வகலாசாலை
ஸங்கீதபூஷணம் ஸ்ரீமான் S. ராமநாதய்யர்
ஸ்ரீமதி விஜயா ராமஸ்வாமி

விலை. ரூ. 1-0-0

## மதிப்புரை.

கற்பாரி ராமபிரானை யல்லால் மற்றுங்கற்பரோ
புற்பாமுதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே
நற்பாலயோத்தில் வாழுஞ்சராசரமுற்றவும்
நற்பாலுக் குய்த்தனன் நான்முகனுர் பெற்றநாட்டுளே.

இந்தக் கலிகாலத்தில் நாத்திகத்தன்மை மேலிட்டவராய்ச் சிலர் முன்வந்து தெய்வதூடணை புரிந்து சாதாரண சனங்களின் உள்ளத்தைப் பேதஞ் செய்கின்றனர். அது, நல்லோர் செவியைச்சுட்டு, அவர் மனத்தைப் புண்படுத்துவது கண்கூடு. அதற்கு மாற்று, கடவுளின் சரிதையை இசைப்பாடலாகப்பாடி நல்லோர் செவிக்கு உணவாகக் கொடுப்பதே என்ற எண்ணத்தை நம்பெருமான், ஸ்ரீமான் ராமாயண கலாமணி S. V. இராமசுவாமி ஐயங்கார் ஸ்வாமிக்குத் (போஸ்ட் மாஸ்டர் வந்தவாசி) தோற்றுவித்தான். அதனுலேயே இந்த இராமபக்தர் இராம சரிதத்தை இசைப்பாடலாகப் பாடத்தொடங்கி, ஸ்ரீராமாயணத்துள் முக்கியமானதெனச் சிறப்புறப் பாராட்டப்படும் சுந்தர காண்டத்தை முதன்முதலிற் பாடி, பின்னர் மற்றைக்காண்டங்களையும் பாடலானுர்.

இந்த ஸ்ரீராம கானாமிருதம், தனது நாமதேயத்தாலேயே ஸ்ரீராம சரிதத்தைக் கானமாகப் பாடும்படியமைந்து, செவிக்குணவாகத்தக்க சிறந்த நூலென்பதைத்தெரிவிக்கின்றது, உலகில் நடக்கும் துஷ்ப்ரசாரங்களைக்குறைத்திடத் திருவுள்ளம் பற்றிய ஸ்ரீராமபிரானது திருவருளால் தோன்றிய இந்த நூல், கற்றோரும் மற்றோரும் செவியினுற் பருகத்தக்க தேவருணவாகும்.

இனிய எளிய சிறந்த தமிழ்நடையிலமைந்த இந்நூலைக்கேட்கும் எவருடைய மனமும் ஸ்ரீராமபிரானது குணத்திலீடுபட்டு ஆனந்தக்கடலுளாழ்ந்து நன்னெறியில்திருந்தும் என்பது திண்ணம்.

இந்நூற்கு இசையமைத்தவர் அண்ணுமலைச் சர்வகலாசாலை சங்கீதபூஷணம் பிரம்மஸ்ரீ S. இராமநாத ஐயரும், இந்நூலை ஆக்கியோரின் தருமபத்தினியாரான ஸ்ரீமதி விஜயா ராமசுவாமி என்பவரும் ஆவர்.

இந்தக் கைங்கரியத்தைப் புரிந்தார்க்கு இராமபிரான் எல்லா விருப்பங்களையும் உதவுவானுக.

வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்.

## முன்னுரை

மெய்ப்பொருள் காட்டவல்ல பண்டைய நூல்கள் பலவற்றுள் ஒன்ருக, வான்மீகி வகுத்த ராமகதையினை மதித்து வருகின்றது நம் அகண்ட பாரத பூமி. இக்காவியத்தின் மணம் கடல் கடந்தும் சென்றுள்ளது. இக்காவியத்தின் வேதாந்தக் கருத்துக்களைக் காணுமாற்றல் நம்மில் பலருக்கு இல்லாது போயினும், சமூக நல்வாழ்வுக்கு அடிப்படையான எளிய தத்துவங்களை இக்காவியம் காட்டுகின்றதென்பதை எவரும் மறுக்க முடியாது எனலாம்.

இத்தகைய சீரிய காவியத்தைக் கம்பன்போன்ற பெரியோர்கள் பாடிச் சிறப்பித்திருப்ப, யானும் எழுதத் துணிந்ததிலுள்ள பேதைமையை நன்கறிவேன்; எனினும், இசையாகவே யமைக்கப்பட்ட வான்மீகரது முதனூலைத் தழுவியே, தமிழிலும் இசையுடன் எளிய சொற்களால் ஒரு நூலையாக்க வேண்டுமென்ற பேராவலே என்னைச் சுந்தரகாண்டமாகிய இக்கானாமிருதத்தை எழுதத் தூண்டியது. 'ஆசை வெட்கமறியாதன்ருே !'

1950-இல் இதே நூலின் முதற்பதிப்பை உருவாக்கிப் பலவூர்களிலும் இராமபிரானது புகழைப் பரக்கப்பாடி அப்புத்தகங்களை இலவசமாகவே விநியோகித்தேன். அதனைக் கண்ணுற்றுமகிழ்ந்த அறிஞர்பலர் ஏனைய காண்டங்களையும் இதேமுறையில் இசையோடு தொகுக்கப்பணித்தனர். அப்பணியேற்று அதனை இயலுமாற்ருன் செய்து வருகின்றேன். சில நாட்களாக இராமாயணத்தைப்பற்றிச் சில அவச்சொற்களையும் கேட்கும்படியான பாவத்தை நம்தமிழ்நாடு புரிந்துவிட்டது; அதற்கு மனம் வெம்பி, இந்நூலின் இரண்டாம் பதிப்பையும் ஏனைய காண்டங்களையும் தொடர்ந்து இசைக்குறிப்புக்களோடு வெளியிட முன்வந்துள்ளேன். இந்நூலுள் குற்றங்குறைகள் சில காணப்படினும் 'நெல்லுக் குமியுண்டு நீர்க்கு நுரையுண்டு, புல்லிதழ் பூவிற்குமுண்டு' என்றபடி ஏற்று, என் நன்முயற்சியினைக் கருதி, இந்நற்றமிழ் இயலுலகமும் இசையுலகமும் எனக்கு ஆதரங்காட்டி ஊக்குவிக்குமென்னும் நம்பிக்கையுடையேன்.

இப்பதிப்பில், பல இசைவல்லுநர்கள் பணித்தபடி இசையமைப்பையும் ஒரு அநுபந்தமாய்ச் சேர்த்துள்ளேன்; எனினும், பாடுபவர்கள் அவரவர்களது மனோபாவத்திற்கேற்ப இசையினை யமைத்துப் பாடிக் கொள்ளலாம்.

இம்முயற்சியில் என்னை ஆசீர்வதித்து மதிப்புரையும் தந்தருளிய தமிழ்ப் பெருந்தகையாளராய் உரையாசிரியச் சக்கரவர்த்தியாய் இலங்கி

வரும் ஸ்ரீமான் உ. வே. வை. மு. கோபாலகிருஷ்ணமாசார்ய ஸ்வாமி யவர்கட்கு யான் தலையல்லால் வேறு கைம்மாறிலேன்.

தமிழிலக்கியங்களைத் தம் நுண்ணறிவு கொண்டு புதியகருத்துக் கள் கண்டு காட்டவல்ல விவேகாநந்தர் கல்லூரித் தலைமைத் தமிழ்ப் பேராசிரியர் ஸ்ரீமான் உ. வே. C. ஜெகந்நாதாசார்ய ஸ்வாமி யவர்கள் இந்நூலின் பிழைகளைத் திருத்திப் பரிசோதித்துச் செவ்விய உருவாக்கித் தர மனமுவந்து வந்து தமிழ்ப்பணி செய்தது எனது பெரும்பேறென்றே கருதுகின்றேன்.

இந்நூலின் இசையமைப்பினை என் வாழ்க்கைத்துணைவி உருவாக்கி ருளெனினும் அதை ஒப்புநோக்கிப் பிழைகளைந்து உணர்ச்சி யூட்டும் வகையில் இசையநுபந்தத்தை அமைத்துதவிய சங்கீத பூஷணம் ஸ்ரீமான் S. ராமநாதய்யர் அவர்களுக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எங்கள் குடும்பம் இராகவன் கதையிற் பித்துக்கொண்டது என் பதற்கு வேறு சான்றுகளும் வேண்டுமோ? எங்கள் மூத்தவர் D. S. ராகவன் வான்மீகத்தைத் தமிழாக்கி அவ்விராமபிரானது திருவடி களை அநவரதமும் வழுத்தி வருகிருர். என் மூத்த சகோதரர்களாகிய ஸ்ரீமான் C. D. கிருஷ்ணமாசார்யர், C. D. சேஷாத்திரி ஐயங்கார் இருவரும், தங்களது அறிவாலும் உழைப்பாலும் இச்சுந்தரகாண்டத்தை யும் ஏனைய காண்டங்களையும் வெளியிட முன்வந்துள்ளனர். அவர் களுக்கும் எனது ப்ரணாமங்கள் உரித்தானவை. இவ்விழுமிய செயல் அவர்களது பண்பட்ட உள்ளங்களை விளக்குவதன்றோ!

வந்தவாசி தாலுக்காவிலுள்ள கீழ்கோவளவேடு, ஐப்திகாரணை போன்ற கிராமங்களில் வாழும் பெருமக்கள் இந்நூலைப் பாடக் கேட்டுப் பெரிதுமுவந்து தம்மாலியன்ற பொருளுதவிசெய்ய முன்வந்தது போற்றத் தக்கது. அன்னார்க்கு என்வணக்கம் உரித்தாகுக.

"தொல்லிலங்கை கட்டழித்த சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே

திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே."

S. V. ராமஸ்வாமி.

குகனெடு நட்புக்கொண்டே கானிடை—புகமுனி பரிவு கண்டான்
தகவொடு மரவடி கதறி வந்ததன் தம்பிக்குப் பணயம் வைத்தான்
தண்டகம் தனைச்சேர்ந்தான்—விராதன் தடந்தோள் விழக் கொன்ருன்
அண்டம் காணசர பங்க ரின்பநிலை அடைந்திட வருள்செய்தான். 5

பஞ்சவடியி லன்றே—பாவையெனக் கொஞ்சி யரக்கி வந்தாள்
நஞ்செனத் தாயை நலியநினைத்த வவள் நாசியை நீக்கிட்டார்
வீரம் பேசிவந்தார்—பல்லாயிரம் கோர வரக்கர் களைமுன்
போர்செய் தொழித்தனன் கோதண் டன்புகழ் போற்றினர் தேவர்களும். 6

வேறு

வானவர் மயங்கிடும் அழகொடு நின்றதொர் மானெருு சானகிமுன்
தேனமர் மொழியினள் வேண்டிட ராகவன் தேடியே சென்றனன்பின். 7

அரக்கர் சூழ்ச்சியென அறியா அரிவையும் அன்று தனித்து நின்ருள்
இளையவன்—நொந்து விடுத்துச் சென்ருன்
வருக்கமொ டொழியும் வகையென வறியா தரக்கனு மெதிர்வந்தான்
அன்னையைச் சிறைகொண்டான்—அவனழிய
அன்றே விட முண்டான்.
ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம் 8

பதறிவந்த வையன் பர்ண சாலையிடை பாவையைக் கண்டிலனுல்
கதறித் தேடவே பின்னவனேடும் கானகம் புகுந்திட்டான்
அகல கிலாதவவ் வமுதை யிழந்துபின் ஆவி துடிக்க நின்ருன்
பகலு மிரவு மையன் பாவையின் நினைவால் பாரில் துன்ப முற்ருன். 9

வருந்தி வரும் வழியில்—வரைபோல்
பருந்து கிடக்கக் கண்டான்
ஐயம் நீங்கி நின்ருன்—சடாயுவின்
மெய்யன் புணர்ந்திட்டான். 10

தேவியும் சிறையானுள்—எனுஞ் செய்தி
ஆவி துடிக்கக் கேட்டான்
கழுகரசன் செல நற்கதி ஈமம்
வழுவிலாது செய்தான். 11

வந்த கவந்தனையே—இவ்வுலக
பந்தனை போக்கியபின்—சென்று
அன்பெனும் கனிகளை அன்னை சபரிதர
அமு தெனவே உண்டான்.
—அவளுமோர் அரும்பத மதுகண்டாள். 12
—ஸ்ரீராம ராம் ராம்.

**வேறு**

மானும் மயிலும் வருகா னிளங்கொடியும் மாதவ ளெழில்காட்ட
—அவரிட மாபெரும் துயர்கூட்ட
கானில் வருமிவரைக் கதிரவன் மைந்தனும் கண்டு ஐயம் கொண்டான்
—அனுமனும் காணு மேவல் பூண்டான். 13

ஐயன் வரும் வழியில்—அனுமனோர்
அந்தணன் போல்நின்றான்
ஐயந் திரிபறக் கலைகளைத் தோன்றிய
வன்றே கற்றுணர்ந்தான்
—கதிரவன் முன்பே நின்றுணர்ந்தான். 14

மூவரில் மேம்பட்டார்—மானுடர்
தேவரில் நேருமிலை—இவர்க்கு
மாலரன் பிரமனு மோருரு வமெனக்
காலின் மைந்தன் கண்டான். 15

தேவரும் நடுங்கிடும் வாலி கதையையவர் ஏவ விளக்கிட்டான்
—அரசனை மேவிக் கூடவிட்டான்
யாவரும் கண்டிட வையன் சுக்ரீவனு மன்று நட்புக் கொண்டார்
—வானவர் நின்று நன்மை கண்டார். 16

உருமி வந்தபெரும் வாலியி னுயிரை ஓரம்பா லுண்டான்—நாயகன்
—ஓரம்பா லுண்டான்
பெருமித மொழியவே வாலியு மண்ணலைப் பரம்பொரு ளெனக் கண்டான்
—பணிந்தே அரும்பதம் கைக்கொண்டான்
நினைவு மறந்த சுக்ரீவனை முனிந்திடச் சிறினன் இலக்குவனும்
கனிவுட னன்னையைத் தேடிக் கண்டுவரக் கவிப்படை யேவிவிட்டார்
—என் திசையும் கடுகியே போகவிட்டார் 17

அவனே வல்கொண்டே—தென் திசைக்கு
அங்கதப் படை வந்தோம்
அன்னையைக் காணு துளம்நொந் தின்றே
ஆவி தொலைக்க நின்றோம்.
—அதன் முன் ஐயனைப் பாடுகின்றோம்.
ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம் 18

கண்ணெடுந் தூரம் காண வல்லபெரும் கழுகிறை சம்பாதி—தன்
பின்னவன் சடாயு அண்ணல் பணியிலே புண்ணிய லோகம்சென்றான்
—எனக்கேட்டு மண்ணில் புரண்டழுதான். 19

ஐய னருளினு லவன்சிற கன்றே அழகுடன் தோன்றக் கண்டான்
ஐயம் நீங்கி யவர் மேற்செல அன்னையின் மெய்யுரை கண்டுசொன்னான். 20
பதுங்கின னிலங்கையில் பாவை யொடுமெனப் பகரக்கேட்ட வந்நாள்
வதங்கிடும் பயிர்மழை வரக்களிப் பதுபோல் வாலிமைந்த னுனன்.
—கவிகளும் வாழ்த்தி மகிழ்ந்திட்டார். 21

கடலேக் கடக்கும் வன்மை—நம்மிடைக்
கவியில் யாருக் குண்டு?—என்றே
கலங்கி நின்ற வாங்கே—சாம்பவான்
காலின் மைந்தன் என்றான்—ஒருவனே கடலேக் கடப்ப னென்றான். 22

ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம்

## அத்தியாயம்—2

[இந்த அத்தியாயத்தில் மாருதி மஹேந்திரமலையையடைந்து கடல்தாவுதலும், மைநாகத்துக்கும் மாருதிக்கும் நடந்தசம்வாதமும், சுரசையின் சாகசமும் கூறப்படுகின்றன.]
(ராகம் - நாதநாமக்ரியா)

ஓதியுணர்ந்தான் நீதியறிந்தான் உலவாதான் நின்றே
பாதியுடம்பில் மங்கைகொண்டவன் பலம்கொண்டான் அன்றே
ஆதியன்பணியும் அவருரையருளும் அருஞ்சிறகாய்க்கொண்டே
மாதிரம்தாவிச் சென்றுதிரும்புதல் மனங்கொண்டான்கண்டே. 23

மருங்கே நின்ற மஹேந்திர மலேயை நெருங்கித் தாவிநின்றான்
ஒருங்கே போர்நிழல் இலங்கையும் கண்டிட ஒப்பரும் உருக்கொண்டான்
—அவன் திரிவிக் கிரமன் ஒத்தான். 24

அண்டம் நடுங்கிட ஆழிகலங்கிட அவன்தோள் கொட்டிடவும்
கண்டனர் தேவரும் மதியொடு இரவியின் மண்டல மவன்முடியில்
எண்டிசை சென்றே மீண்டதுவாலம் மண்டல மின்னலென
வண்டமர் பூங்குழல் வான மகளிரிதைக் கண்டு கலங்கினரே. 25

வானவர் வியந்திட வைநதேயனென வானில் கிளம்பினனே
—ஸ்ரீராமனின் நாமம்விளம் பினனே
தானு முடன்செலத் தளர்வது போல்மலே தரைவிட் டெழுந்ததுவே
—தாவிடக் கடலும் கிழிந்ததுவே. 26

காதங்கள் பின்னுறக் கைகள் வீசிவால் கரகர வெனச்சுழல
காலின் சேயவன் கடுகிச் சென்றனன் கதிரவன் வெள்கிடவே
—வேகமதில் கடலும் துள்ளிடவே. 27

மந்தர மலேயெனவே—கடலிடை
சுந்தர மைநாகம்—அவனெதிர்
அந்தரம் கிளம்பியதே—அரக்கரின்
தந்திரம்போ லன்றே. 28

உத்த மன்பணியில் ஈடுபட்டுநான் உதவிடக் கடன்பூண்டேன்
புத்துயிர் பெற்றேன் உந்தன் தந்தையின் புனித உதவியாலே
எத்திற னும்நான் பூசித் திடநீ ஏற்றவ னறிவாயே
இத்தின மென்மே லிறங்கிசாந்திபெற் றினிது செல்வைநீ யென்றான்
—நல் லுணவுகொள்வை யென்றான். 29

மலை சொல்லக் கேட்டான் மாருதியும்
கலகல வென நகைத்தான்.
ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம் 30

அன்னையைக் கண்டிலம் அறுசுவை யுண்டிட அழைப்பது முனக்கழகோ?
எண்ணிய கருமம் முடிக்குமுன் விருந்தை ஏற்றிடு விகழாரோ?
புண்ணியனே நான் இலங்கை சேருமுன் மண்ணை மிதிப்பேனோ!
உன்னிய பணிகள் முடித்தினி தேவந் துன்மேல் தங்கிடுவேன்
—உவகையொடு உணவுங் கொண்டிடுவேன்.
நன்றென மைந்நாகம்—நகரவே—சென்றனன் மேல்பணியில்.
ஸ்ரீராம ராம் ராம். 31

வாதாத் மஜனின் வலிவு கண்டுதாம் வாழ்ந்திடத் தேவர்களும்
மாதா நாக மகள்தனை யேவியே மறைத்தனர் வான்வழியை
'நீதா னெனக்கொரு வா'யென வவளுந் நீள்வான் வாய் திறந்தாள்
'போதா தெனக்'கென வனுமனு மவள்முன் பொலிவொடு
வளர்ந்திட்டான். 32

அரக்கியின் வாயும் அவனொடு வளர்ந்திட வயர்ந்தனர் தேவர்களும்
சுருக்கினன் வடிவையொர் அணுவெனக் கண்டிலர் சூழ்ச்சியைச்
[சூழ்ந்து நின்றோர்
குறுக்கெது மிலனாய்க் குதித்துமே நுழைந்தனன் குகையெனு
[மவள் வாயில்
சிரித்துடன் மீண்டான் செவிவழி மறுகணம் ஜெயித்தோமெனமகிழ்ந்தார்.
—தேவர்கள் அநுமனையே புகழ்ந்தார். 33

சுரசையும் பிரமித்தே—தன்—சுய உருவம் கொண்டாள்
சுரர்களும் போற்றிடவே—அனுமன்—சுபங்கொள மேற்சென்றான்.
—ஸ்ரீராம ராம் ராம். 34

## அத்தியாயம்—3

[இந்த அத்தியாயத்தில் அங்காரதாரை அனுமனுக்கு இடையூறு செய்தலும், அவளை வதைத்து அனுமன் இலங்கை சேர்தலும், இலங்காதேவி விடுபெறலும் கூறப் படுகின்றன.]

(ராகம் - மோஹனம்)

மங்காதவேக மொடுவானில் செல்லும் மறையோன் விடுத்த நிழலும்
தங்காது செல்லல் தான்கண் டயர்ந்து தருமத்தைக் கொல்லும் நினைவால்
அங்கார தாரை யெனுமோ ரரக்கி அவன்வேகம் குன்ற நின்றாள்
எங்கேனும் நன்மை யிடையூ றிலாமல் இனிதேமுடித்தல் உளதோ?
—முனிவுட னரக்கியையே—விவரம்
—வினவிட முன்னின்றான் 35

கடலைக் கடக்கும் வன்மை—நம்மிடைக்
கவியில் யாருக் குண்டு?—என்றே
கலங்கி நின்ற வாங்கே—சாம்பவான்
காலின் மைந்தன் என்றான்—ஒருவனே கடலைக் கடப்ப னென்றான். 22

ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம்

## அத்தியாயம்—2

**[இந்த அத்தியாயத்தில் மாருதி மஹேந்திரமலையையடைந்து கடல்தாவுதலும், மைநாகத்துக்கும் மாருதிக்கும் நடந்தசம்வாதமும், சுரசையின் சாகசமும் கூறப்படுகின்றன.]**
**(ராகம் - நாதநாமக்ரியா)**

ஓதியுணர்ந்தான் நீதியறிந்தான் உலவாதான் நின்றே
பாதியுடம்பில் மங்கைகொண்டவன் பலம்கொண்டான்அன்றே
ஆதியன்பணியும் அவருரையருளும் அருஞ்சிறகாய்க்கொண்டே
மாதிரம்தாவிச் சென்றுதிரும்புதல் மனங்கொண்டான்கண்டே. 23

மருங்கே நின்ற மஹேந்திர மலையை நெருங்கித் தாவிநின்றான்
ஒருங்கே போர்நிழல் இலங்கையும் கண்டிட ஒப்பரும் உருக்கொண்டான்
—அவன் திரிவிக் கிரமன் ஒத்தான். 24

அண்டம் நடுங்கிட ஆழிகலங்கிட அவன்தோள் கொட்டிடவும்
கண்டனர் தேவரும் மதியொடு இரவியின் மண்டல மவன்முடியில்
எண்டிசை சென்றே மீண்டதுவாலம் மண்டல மின்னலென
வண்டமர் பூங்குழல் வான மகளிரிதைக் கண்டு கலங்கினரே. 25

வானவர் வியந்திட வைநதேயனென வானில் கிளம்பினனே
—ஸ்ரீராமனின் நாமம்விளம் பினனே
தானு முடன்செலத் தளர்வது போல்மலை தரைவிட் டெழுந்ததுவே
—தாவிடக் கடலும் கிழிந்ததுவே. 26

காதங்கள் பின்னுறக் கைகள் வீசிவால் கரகர வெனச்சுழல
காலின் சேயவன் கடுகிச் சென்றனன் கதிரவன் வெள்கிடவே
—வேகமதில் கடலுார் துள்ளிடவே. 27

மந்தர மலையெனவே—கடலிடை
சுந்தர மைந்நாகம்—அவனெதிர்
அந்தரம் கிளம்பியதே—அரக்கரின்
தந்திரம்போ லன்றே. 28

உத்த மன்பணியில் ஈடுபட்டுநான் உதவிடக் கடன்பூண்டேன்
புத்துயிர் பெற்றேன் உந்தன் தந்தையின் புனித உதவியாலே
எத்திற னும்நான் பூசித் திடநீ ஏற்றவ னறிவாயே
இத்தின மென்மே லிறங்கிசாந்திபெற் றினிது செல்வைநீ யென்றான்
—நல் லுணவுகொள்வை யென்றான். 29

மலை சொல்லக் கேட்டான் மாருதியும்
கலகல வென நகைத்தான்.
ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம் 30

அன்னையைக் கண்டிலம் அறுசுவை யுண்டிட அழைப்பது முனக்கழகோ?
எண்ணிய கருமம் முடிக்குமுன் விருந்தை ஏற்றிடி லிகழாரோ?
புண்ணியனே நான் இலங்கை சேருமுன் மண்ணை மிதிப்பேனோ!
உன்னிய பணிகள் முடித்தினி தேவந் துன்மேல் தங்கிடுவேன்
—உவகையொடு உணவுங் கொண்டிடுவேன்.
நன்றென மைந்நாகம்—நகரவே—சென்றனன் மேல்பணியில்.
ஸ்ரீராம ராம் ராம். 31

வாதாத் மஜனின் வலிவு கண்டுதாம் வாழ்ந்திடத் தேவர்களும்
மாதா நாக மகள்தனை யேவியே மறைத்தனர் வான்வழியை
'நீதா னெனக்கொரு வா'யென வவளுந் நீள்வான் வாய் திறந்தாள்
'போதா தெனக்'கென வனுமனு மவள்முன் பொலிவொடு
வளர்ந்திட்டான். 32

அரக்கியின் வாயும் அவனொடு வளர்ந்திட வயர்ந்தனர் தேவர்களும்
சுருக்கினன் வடிவையொர் அணுவெனக் கண்டிலர் சூழ்ச்சியைச்
[சூழ்ந்து நின்றோர்
குறுக்கெது மிலனாய்க் குதித்துமே நுழைந்தனன் குகையெனு
[மவள் வாயில்
சிரித்துடன் மீண்டான் செவிவழி மறுகணம் ஜெயித்தோமெனமகிழ்ந்தார்.
—தேவர்கள் அநுமனையே புகழ்ந்தார். 33

சுரசையும் பிரமித்தே—தன்—சுய உருவம் கொண்டாள்
சுரர்களும் போற்றிடவே—அனுமன்—சுபங்கொள மேற்சென்றான்.
—ஸ்ரீராம ராம் ராம். 34

## அத்தியாயம்—3

[இந்த அத்தியாயத்தில் அங்காரதாரை அனுமனுக்கு இடையூறு செய்தலும், அவனை வதைத்து அனுமன் இலங்கை சேர்தலும், இலங்காதேவி வீடுபெறலும் கூறப் படுகின்றன.]

**(ராகம் - மோஹநம்)**

மங்காதவேக மொடுவானில் செல்லும் மறையோன் விடுத்த நிழலும்
தங்காது செல்லல் தான்கண் டயர்ந்து தருமத்தைக் கொல்லும் நினைவால்
அங்கார தாரை யெனுமோ ரரக்கி அவன்வேகம் குன்ற நின்றாள்
எங்கேனும் நன்மை யிடையூ றிலாமல் இனிதேமுடித்தல் உளதோ?
—முனிவுட னரக்கியையே—விவரம்
—வினவிட முன்னின்றான் 35

'நீயா ருரையிந் நீள்வா ஊயெலாம் வாயால் மறைத் திட்டாய்'—என
'விவாய் பல்லிடை' யென்ருள் அனுமனும் வீரம் விளக்க லானுன்
பேழ்வாய் புகுந்தே மறுகண மவள்குடல் பீறி வெளியில் வந்தான்
ஆழ்வான் கீழ்வந் தரவு கொள்வதுபோல் அவள்குடல் கொண்டு
[சென்ருன். 36

பின்னிடை யூறுகள் பிறவா வண்ணம் உன்னி ராமநாமம்
சொன்ன வாறுவான் சென்றனன் கடலும் சேர்ந்துமுடிந் ததுவே
பொன்னி லாயபல கோபுரம் வானெழப் பொலியு மிலங்கை கண்டான்
அன்னை காணுமோர் ஆசை கொண்டவன் ஆங்குள மலைகுதித்தான்
—நகரமே—குலுங்கிட அதை மிதித்தான்
—வியந்து நின்று கண்டான்—விண்ணவரும் பயந்துலாவும் நகரை.
—ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம். 37

தங்க மூடுமணி தந்த வேலையிடை தாங்கிடாது வினை
செங்க லோடுமன் சேர்ந்தஇல் லெதுவும் அங்குக்காண கில்லான்
மங்கி டாதபுகழ் மன்னு சொர்க்கமதை மாற்ற வெண்ணித் தேவர்
லங்கை தேடிபணி பூண்டு வாழ்வதென சங்கையோடு கண்டான்
—அனுமனும்—பொங்கிவியப் புண்டான். 38

பந்திபந்தியாய்த் தேர்செலு மாறிடைப் பரந்துநீண்ட பலவீதி—தடை
விந்தையாகப் பரி யானைகூட்டமாய் விளங்கு கோட்டைகளின் ரீதி
அந்தரம் வேள்வியி னரும்புகை செலவாங் கரக்கர்வாழு மறநீதி
எந்தை வினவுகையி லெந்த விதம்நான் எடுத்துச்சொல்வ திவர்சேதி
—என ஏங்கி யனுமன் கண்டான்—வான் வளர்ந் தோங்கி
[நின்ற மதிலை, 39

எண்ணில் வீரர்பலர் எமனென வாயுதம் ஏந்தி வாயில் காப்பார்
நண்ணி லவ்வழியில் நலியும்போர் நமது நாயகன் பணிக்கிடை யூரும்—என
மண்ணி லோர்புயல் எழுவதுபோ லவன் மதிலைத் தாவியயல் நின்ருன்
புண்ணிய மோட்டிடு பூதமென வளர் புல்லியளைத் தான் கண்டான். 40

தோளோர் எட்டுடையாள்—ஒளிவிடும்
வாளோர் கைக் கொண்டாள்—அனுமனை
'ஆள்யார்' இங்குற்ருய்?—அறிவிலாய்!
'மாள்வாய்' என வெகுண்டாள். 41

'முக்கண் ணுடையோனும்—இங்குப்புக
முன்பின் யோசிப்பான்—அற்பமோர்
மர்க்கடம் நீவலையோ ?—சென்றுபுக
வெட்கமிலை போ போ'. 42

அரக்கியின் மொழி கேட்டான்—அனுமனும்
குறுக்குக் கேள்வி போட்டான்—‘ ஓர்
குரக்கின முன்னூர் கண்டா லதனெழில்
குறைந்திடுமோ ?’ வென்றான். 43

‘குறுகிய தாலுன் ஆயுள்நீ யின்று குறுக்குப் பேசுகின்றாய்’—என
உருவிய வாளொடு வேலை யனுமன்மேல் உலைய வீசலானாள்
பருகிடு மாபோ லனுமனு மவைகளைப் பல்லா லொடித்திட்டுப்
பெருகு கோபமொடு கரத்தால் புடைத்திடப் பொங்கிமே லெழுந்தான். 44

‘ பெண்ணென உனைவிட்டேன்—இன்றேல்
உண்ணுவ னுன்னுவி ’—என்றே
திண்ணென வோர்புடையால்—அவளை
மண்ணுற விழ்த் திட்டான்
உதிரம் கக்கும் வாயால்—அரக்கியும்—உண்மை விளம்பிடுவாள். 45
—ஸ்ரீராம ராம் ராம்.

‘ஐய’கே ளுந்தன் ஆற்றலா லின்று அடிமை நீங்கி நின்றேன்
மெய்யுரை யிதுமலர் மேலவ னேவிட மேவிக் காவல் பூண்டேன்
உய்யு மாறென்னை யுனைப்போ லோர்குரங் குதைத்துக் குத்து மென்றான்
ஐய மில்லையினி அறிந்தே னிலங்கை அழிவது நிச்சயமே
—இது மொழிவது முன்செயமே.
ஸ்ரீராம ராம் ராம். 46

## அத்தியாயம்—4

[இந்த அத்தியாயத்தில் இலங்கையில் அனுமன் பிராட்டியை அரக்கர் மாளிகை யெங்கும் துருவித்தேடுதலும், அன்னையைக் காணாது அனுமன் பலபல எண்ணிப் புலம்பு தலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - ஆரபி)

ஆங்கொரு தடைபின் னிலனு யனுமன் அன்னைதேட லுற்றான்
—ஐயன்புகழ் தன்னைப்பாட லுற்றான்
ஓங்கிய பலபெரு மாளிகை யுள்ளே உருக் கரந்து நின்றான்
—தாவிப்பின் தெருக்கள் தோறும் சென்றான் 47

வானி றங்கிவந் தோடு கங்கைபல வாயுமைந்தன் கண்டான்
தேனி றைந்தபல தாமரை மூடிய தெண்ணீர் வாவி கண்டான். 48

ஆயுத சாலை கண்டான்—பல்வகைப்
பேயதன் காவல் கண்டான்
காயும் கனியும்பல பூவும் பொலிந்திடும்
கானனம் பல கண்டான். 49

ஏவல் செய்ய வென்றே—வானிலுள
தேவர் காத்து நின்றார்—வியந்தே
சாவ தென்பதிந் நகர மாந்தருள்
சாத்திய மிலை யென்றான். 50

அரக்கியர் தமையாங் கரம்பையர் பணியால் அழகு செய்யக் கண்டான்
கிறுக்குடன் பெண்டிரங் காடவருடலைக் கிளரும் வேகம் கண்டான்
ஆடலு மூடலும் கூடலும் தேடலு மாயவப் பூவையர்கள்
பாடலும் சாடலும் பணிதலு மெழுதலும் பார்த்து வியப்புற்றான். 51

வாயு செல்லவல்ல—இடமெலாம்
தாயைத் தேடிச் சென்றான்—ஆங்கே
மாயையைப் போலொரு வான ளாவும்பொன்
கோயில் நிற்கக் கண்டான். 52

மலையென் றோருருவம்—அதனுள்
மல்லாந் துறங்குவது—கொல்லன்
உலையென நாசியதால்—அவன்விடும்
உறுமூச் சுக்கேட்டான். 53

பலரு மவன் பணியில்—அருகே
பரிந்து நிற்கக் கண்டான்—அவனே
தலைவனின் பின்னவன் கும்ப கர்ணனெனத்
தான றிந்து கொண்டான். 54

மணிகள் துலங்குமம் மண்டப நடுவே மதுக்குடங்கள் கண்டான்
கணிகைய ரவன்துயில் கடைநிலை நோக்கிக் காத்து நிற்கக் கண்டான்
தணிந்தி டாதபெருங் கோபம் கொண்டுபின் தானடங்கி நொந்தான்
அணுகி யெமனிவன் ஆயு ளுண்ணும்நாள் அருகுள தெனநினைந்தான்
—அனுமனும்—ஐயன் பணியில் முனைந்தான். 55

அல்லி மலர் விழியாள்—அன்னையை
அங்குமிங்கும் தேடி—அனுமனும்
இல்லம் தோறும் சென்றான்—இராவணன்
இளையோன் வீடு கண்டான். 56

'கண்ப டாமலே தரும தேவதை காத்து வாசம் செய்ய
எண்ணி வந்திந்த இல்ல டைந்ததோ எனவே பிரமித்தான்
புண்ணியப் பொலிவுள வீடண னைக்கண்டான் பூரித்தே கண்டான்
அண்ணலி னடியான் ஆவதற்கிவன் அருக னெனக் கொண்டான். 57

பத்துத் தலைக்குப் பின்னவ னெனினும் சத்திய முளனிவனே—என
முத்தி ழைத்தவம் மாளிகை யெங்கும் சத்துவ மேகண்டான்
—அனுமனும் மெத்த வியப் புண்டான்
எத்திசை தேடியு மன்னை காணாது ஏங்கி மேலும் செல்வான்
உத்தமி யைத்தா னூரிடை காணா தலைவி மனம் நொந்தான். 58

எள்ளி ருக்குமிட மின்றி யிலங்கை யெங்கும் தேட லுற்ருன்—
[அன்னையைக்
கொள்ளை செய்ததோர் கொடுமையை யுன்னிக் கோபமேலும்கொண்டான்
அள்ளி வீசவொளி அழகுட னேர்தேர் ஆங்கு நிற்கக் கண்டான்
வெள்ளி மலைநேர் புட்பக மெனவதை விளம்ப வியந்து கேட்டான். 59

கும்ப கர்ணனெடு விடண னும்பின் சம்பு மாலிமனைகள்—மற்றும்
அம்புவி நடுங்கிடு மாற்றல் கொண்டபல அரக்கர் வாழும்மனைகள்—
[எங்கும்
நம்பித் தேடியும் நாயகி யார்தமை நான்கண் டிலனென்றே—மனம்
வெம்பி மேலும்செல ராவண னில்லம் வெற்பென வேகண்டான்
—அது ஓர் கற்பனை யோவென்ருன்.

துடித்துள் ளேசென்ருன்—ராவணன்
படுத்துறங்கக் கண்டான்—ஸ்ரீராம ராம் ராம். 60

'ஆஹா! அன்னையைச் சிறைசெய் தவிவன் ஆற்றலழிக் காமல்
போவே னெனிலென் வீரமதனையிப் புவியோர் இகழாரோ?'—எனக்
கோபா வேசம் கொண்டான் மறுகணம் குளிர்ந்தே நினைவுற்ருன்
போகா வையன் வாளிக் கன்றோ போருண விவனென்ருன். 61

மஞ்சமேலாங்கு மாவென வளரும் மந்தோ தரிகண்டான்
கொஞ்சம் தனை மறந் தன்னை யோவெனச் சஞ்சலமுங் கொண்டான்
பஞ்சை யவளுமோர் அரக்கி யெனுங்குறிகள் பலவவன் கண்டிட்டான்
மிஞ்சு மிடமேதும் இலங்கையி லிலையென மேலும் தேடலானன்
—காணுது துயரம் மூடலானன். 62

அறிவி ழந்து நின்ருன்—தேவியின்
உறைவிடம் காணமல்—மனத்தே
விரைவினில் பலபல எண்ணி யேங்கியே
விம்மிக் கதற லுற்ருன். 63

கொன்றே புதைத்தானே?—அன்னையைத்
தின்றே யொழித்தானே?—தீயவன்
அன்றே கடலிடை மீன்களுக் குணவாய்
அள்ளி வீசினனே? 64

'தாயுறை காணவிலை—எனநான்
போயுரைப்ப னுயின்—மன்னவன்
மாய்வது திண்ணம் மாதா பின்னவன்
மற்றுள கவிகளுமே'—என
—வாய்விட் டழுதனனே—தெய்வங்களை
வணங்கித் தொழுதனனே. 65
ஸ்ரீ ராம ராம் ராம்,

வாசி கண்டுவாய் விழுங்க லொத்ததவ் வாரிடாத சடையும்
மாசு கொண்டதென மதன னேவியம் மங்கையாங் கிருந்தாள்
—பற்பல சங்கையா லயர்ந்தாள். 77

'பின்னவ னுரைகே ளாத பேதையெனப் பிரிய வெண்ணினனோ?
மன்னவ னிடமென் னிலையு ரைக்குமுன் மாய்ந்த னனோ கழுகும்?
அன்னை யாணைவந் திடையே யழைத்திட ஆங்கே சென்றனனோ?
என்னை நினைத்தே ஏங்கித் தேடுகையில் எவ்வழிச் சென்றனனோ?'
என எண்ணி யெண்ணி யழுதாள்—அனுமனும் கண்ணி ருகுத்
[திட்டான். 78

வில்லொ டித்துத்தனை மணந்த வீரமதை வீங்கி யுன்னி மகிழ்வாள்
இல்வி டுத்தவன் கானம் செல்வதை யிகழ்ந் துரைத்த தோர்வாள்
சொல்லொ ணாததன் துயரம் வாய்விட்டுச் சொல ஒருத்தரைக் காணாள்
அல்லும் பகலு மிவர் அடிமையி லினியோன் அடையு மின்பம்
—துன்ப மிடையும் நெஞ்சு மெலிவாள். [நினைவாள் 79

தரும மழக் கண்டான்—அனுமனும்
உருமிக் கோபம் கொண்டான்—மேல்
வருவன கண்டிடு மெண்ணமோ டவன்
உருக்க ரந்து கொண்டான்.
ஸ்ரீ ராம ராம் ராம். 80

## அத்தியாயம்—7

[இந்த அத்தியாயத்தில் இராவணன் பல அரக்கமாதர் புடைசூழப் பிராட்டியினிடம் வருதல் கூறப்படுகின்றது.]

(ராகம் - வஸந்தா)

கண்ணெரி பட்டான் கனக ளரக்கனின் கனலை மூட்ட வந்நாள்
எண்ணி லாதபல எண்ணமோ டவன் எழுந்தன னணைவிட்டே
பண்ணி சைத்துப்பல ஏவல் செய்திடும் பாவையர் தனைச்சூழ
உண்ண வெண்ணியே விடமதை யமுதென உத்தமி யிடம்வந்தான்
—காமத்தால்—மெத்த நொந்து வெந்தான். 81

மருளு மான்கணம் மதயானையுடன் மருங்கு செல்வதேபோல்
இரு மருங்கிலும் ஒளிகள் தாங்கியவ் விருளி ரித்துவரு மாதர்
தருண மானதம் தனம்துகி லிடைஎழத் தளர்ந்து செல்லச் சிலரும்
அருவி போல்புரள் அவன் தோள் துகிலதை அங்கை தாங்கிச் சென்றார்
—காமம் பொங்கி யேங்குகின்றார். 82

நிலைய றிந்துமெல் லினிய நாதம்முன் னின்றொலித்த தவன் வரவை
சிலையு யிர்த்ததெனச் சிலவரம் பையர் சிந்தினர் மலரவன்மேல்

மலையி றங்குபனி யெனவே யமரர் மணமுள பன்னீ ரிறைத்தார்
கலையி னெல்லையைக் கண்ட கணிகையர் காற்சிலம் பொலிதரச் சென்றார்
—காமக் கனலை யவர் வென்றார். 83

பொறுக்கொ ணாதபெருங் காமமோ டவன் பொங்கி வருதல் கண்டே
இருக்கு மேதேனு மின்னல் தாய்க்கென்று இமையவ ரஞ்சினரே
வருக்க மோடொழியும் வழியது வென்றே வாதாத்மஜன் கண்டான்
அரக்கனு மாங்கே அன்னை முன்னிவை யடிபணிந்து சொல்வான். 84

உத்தமி யுடல் குறுகச்—செவிவழி
உறுகன லென நுழையப்
பித்தனைப்போ லரக்கன்—பின்னும்
பிதற்றிப் பேச லுற்றான். 85

## அத்தியாயம்—8

[இந்த அத்தியாயத்தில் தன்னை யடைய வேண்டி, இராவணன் பிராட்டியினிடம் பல கூறிக்கெஞ்சுதலும், பிராட்டி துரும்பை இடையிட்டு அவனுக்கு நன்மொழி கூறுதலும் கூறப்படுகின்றன.]

**(ராகம்-காம்போதி)**

'பிரமனின் மரபில் பிறந்த பெற்றியும் பேர்சொலும் தவபலமும்
வரமது வும்மெனக் காக்க வாழ்ந்துமுனை வந்து பணித லென்னே!
பெறஉனைத் துணிந்தே னின்றே லிவ்வுயிர் பேணி வாழ மாட்டேன்
அரிவை! யிவைகளை யறிய வேண்டு மென அடிபணிந்து சொல்வேன்
—உனைப்—பெறும் ஆற்ற லுண்டு வெல்வேன்.' 86

'ஆயு ளெண்ணிவா ழற்ப மானிடர் அரிவை!யுனக் கிணையோ?
போயும் போயுமவர் வீர மதனைநீ புகழல் ஏற்ற தாமோ?
காயும் கனிசருகும் கானி லுண்டவர் காலம் போக்கு கின்றார்
நீயும் காணவவர் நேரி லிங்குவரும் நிலைத்தவீர முளரோ?
—உன்சிறை—மீட்கு மாற்ற லுளரோ?' 87

'எண்டிசை சென்றே செயமது கொண்டே னெங்குமுன் னெழில்போன்றே
கண்டிலே னுள்ளக் காம மூட்டவல காரிகை யொருத்தியையும்
அண்ட மெலாமுன் னடிமை செய்யவைத் ததனைக்கண்டு மகிழ்வேன்
தொண்டு செய்துனது தோற்றங் கண்டுநான் தொல்லை யின்பங்
[கொள்வேன்
—தேவி!நின்—துணையில் மாரன் வெல்வேன்.' 88

'இந்திரன் முதலெத் தேவரு முன்பணி யேற்றுச் செய்ய வைப்பேன்
அந்தணன் மாலரன் இவர்கள் தேவியரை யேவல் செய்ய வைப்பேன்
விந்தை யானவோ ருலகுவாழநீ மந்திரத்தி லமைப்பேன்
சொந்த மாகநின் சொற்பணி செய்தே சுகமொடு வாழ்ந்திடுவேன்'. 89

'நாமகள் கண்டே நானு மாறுணை நானடைந்து வாழ்வேன்
பூமகள் போல்நீ பொலியப் பூக்களிடைப் புல்லிக் களியிலாழ்வேன்
நேம மோடுறை பார்வதி யுமுனது நேர்த்திகண் டயர்வாள்
சேம மோடுபுகழ் சேரநிற்கையில் சிறியரை நினைப்பாயோ?
—எனைநீ—சேர மறுப்பாயோ?' 90

'கொள்ள வெண்ணிடில் கோளரி விட்டே குறுமுய லொன்றைநீ
எள்ளி யெவ்வுலகு மேந்திழை யே!யுனை ஏளனம் செய்யாரோ?
வெள்ளி மலைநான் அள்ளி வீசியதோர் வெற்பென வறியாயோ?
கொள்ள வெண்ணியுனைக் கொண்டுவந்துளேன் குறுக்கு சொல்வதாமோ!
மானுடர்—என்னை வெல்லப்போமோ! 91

என்றவன் பேசிய வெல்லா மவள்செவி யெரியென நுழைந் துள்ளம்
சென்றெரித்திட வுமுள்ளம் சிதைந்தே சேயிழை புகைந் திட்டாள்
அன்றுரைத்த வவன் வீரமும் புகழும் அற்பத் துரும் பெனவே
நின்ற வேதமொழி பலவும் துணிவுடன் நிருதனுக்கே யுரைத்தாள்
—அவன்வாழப்—பொறுமை கொண்ட மனத்தாள். 92

'தரும மிலாப்பல வரக்க ருன்போலத் தரணியி லிருந் தொழிந்தார்
—அவருள்
சிறுமை யானவிப் பிறரில் விழைவைச் சேர்ந்தவர்க் கண்டாயோ?
பெருமை யாகநீ பேசிய பேறதைப் பெற்றவழியும் நன்றாய்
அறிந்து மதனைவிட் டழியவோ வின்று அயல் இல் நேசிப்பாய்
—அதிலுள—இழிவை யோசிப்பாய்'. 93

'வெற்பென நீபுகழ் வரமு மாற்றலும் வேறுள பல மெல்லாம்
கற்பின் முன்நின்று கதுவ வல்லதோ? கனவுகாணு மறபா!
அற்ப மானுடன் என்று யண்ணலை யவர்முன் வரப் பயந்தே
சிற்ப மானென்று கொண்டு நீயவர் சிந்தை கலக்கினையே!
—உனைக்கொல்லும்-வில்லை விலக் கினையே!' 94

'தண்டகம் முன்னாள் புகவாங் குளபல தவசியர் ஐயனிடம்
அண்டை நின்றநான் கேட்க உரைத்தனர் ஆணவ முனதெல்லாம்
கொண்டன னன்றே குறியென உனையவன் கோதண் டம்தனக்கே
கண்ட நிசாசரி காதொ ழித்துமுன் காவலுக் கெச்சரித்தான்
—கரன்படை—கலங்கநின் றெரித்தான்'. 95

'திரிசிர சுடன்பல் லாயிரமரக்கர் தேடிவந்த வந்நாள்
ஒருகணை மதிலவ ரொழிந்தது கேட்டும் ஓர்ந்திலை யவர்வீரம்
கருகி நீநடுங்கும் கார்த்த வீரியனைக் களைந்த வாளி யானைச்
செருவி லாதொடுக்கிச் செகமதைக் காத்தவன் சில மறிந் திலையே?'
—அவன் ஈர முணர்ந்திலையே. 96

'கதிரவ னொளிபோல் பிரியா வென்னை நீ கவர்ந்து கொண்டு வந்தாய்—பின்
நிதியொடுன் ஞற்றலும் நித்திய மெனநல் நீதியைக் கைவிட்டாய்
விதிவழி நீயுமுன் மரபு மிலங்கையும் விழுவதை விலக் குவையேல்
பதியிட முடனென்னைச் சேர்த்துப் பணிந்திடில் பழியவன் பொறுத்திடலாம்
—நீயுமுன்-உயிரொடு பிழைத்திடலாம்'. 97
ஸ்ரீராம ராம் ராம்.

## அத்தியாயம்—9

[இந்த அத்தியாயத்தில் இராவணன் பின்னும் பிராட்டியைத் தன் வசப்படுத்துமாறு அரக்கியர்க்கு உரைத்துப் போதலும், அவ்வாறே அரக்கியர்பலர் பிராட்டியை நெருக்குதலும், திரிசடை தான் கண்ட கனவுரைத்தலும், பிராட்டி தன்உயிரை விட வெண்ணி ஒரு மரத்தினை அணுகுதலும் கூறப்படுகின்றன.]

(ராகம்-மலயமாருதம்)

செங்கமலத்தாள் செம்மொழி யிவைகள் சேரலு மவன் செவியில்
அங்க மோடுமனம் புழுங்கிட வரக்கன் அறிவு மங்க லுற்ருன்
தங்குங் காமமத் தழலணைத்திடத் தான் புகைந் துரைப்பான்
'எங்குங் கண்டிலன் சிறுமதி யுன்போல் ஏதலனை யென்ருய்
—மானிடர்—சாதியும் வலி' தென்ருய். 98

'எனைப் பழிப்பவர் மூவ ரேனும்பின் எஞ்சி வாழ்வ துண்டோ?
உனைப் பிழிந்துமுன் குருதி யுண்டுநான் உவகை கொண்டிடாமல்—உன்
வனப்பு கண்டுயர் மார னம்பினுல் வதங்கி வாடி நின்றேன்'—எனச்
சினம் பொலிந்த வவன் சொற்கள்கேட் டனுமன் சிறிக்கைப் பிசைந்தான்
—புடைத்திட-நேரில்வர விசைந்தான். 99

மேலு மவ னுரைப்பான்—வெகுண்டோர்
காலனென விறைப்பான்
ஓலமின்றி யிவள் என்னைச் சேர்வதற்
கொப்ப வையுமென்ருன்
—சாவைத் தப்ப வையுமென்ருன். 100

'எவ்வழி யேனு மிவள்—எனை மருவச்
செய்வ துங்கள் கடனும்'—எனச்
செவ்விழி கனலுகச் செப்பித் திரும்பினன்
சேவகர் நடுங்கிடவே
—மிதிலைமகள்—தானு மொடுங்கிடவே.
ஸ்ரீராம ஜெய ... ... 101

வேதனை மனமே கொண்டிட வன்னை வெம்பிமூச் செறிந்தாள்
மாத மொன்றில்நான் அரக்கனுலிங்கு மடிவது நிச்சயமே
ஆதர வோடொரு வார்த்தை யென்னிலை ஐயனுக் காருரைப்பார்?
மாதவம் செய்திலென் மற்ருெரு முறைநான் மன்னனைக் கண்டிடவே
—அவர்தரும்-மொழியமு துண்டிடவே. 102
ஸ்ரீராம ராம் ராம்.

ஐய மேதினி யழகன் மோதிரம் அடையா ளமும் சொல்வேன்
ஐயம் நீங்கிடும்' எனவாங் கனுமன் அன்னை யெதிர் வந்தான்
—அம்மையவள்— வாழ உயிர் தந்தான். 115

ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ஜெய ஸ்ரீராம ராம் ராம்

அண்ணலின்புக ழமுதையுண்டன்னை அங்குணர்வு பெற்றுள்
எண்ணமோ டவள் நினைவுற வாங்கே எதிரொரு கவிகண்டாள்
பண்ணி சைத்தவன் பாடல்கேட் டதான் பலபல நினைந்திட்டாள்
'என்ன வாயினு மாகுக இவனென் இதயங் குளிரச் செய்தான்
—செவிக் கின்னமுதம் பெய்தான்.' 116

'கற்றறிந்த பெருங் கவியிவ னொளியில் கதிரவன் போன் றுள்ளான்
சொற் றெளிந்த மொழி கேட்கிலிவ னுமோர் சோர வரக்க னல்லன்
உற்ற வரலாறு முள்ள முருவமும் உண்மை யொன்று மறியேன்
நற்றவ மேயெனை நாடி வந்ததென நாயகன் புகழ் கேட்பேன்
—நலியா தென்னுயிரை மீட்பேன்.' 117

## அத்தியாயம்—11

[இந்த அத்தியாயத்தில் அனுமனின் வேண்டுகோளின்படி, அன்னைதன் வரலாற்றை விளங்க உரைத்தலும், பிராட்டியின் கட்டளைப்படி திருவடி தன் வரலாற்றைக் கூறுதலும் கூறப்படுகின்றன.]

(ராகம்—கரஹரப்ரியா)

அருகு பணிந் தனுமன்—அவள் மனம்
உருக மேலு முரைப்பான்—ஸ்ரீராம ராம் ராம்
'அமுதின் வந்தவவ் விலக்குமி யோ? நீர் அரன்மனை பார்வதியோ?
அமர வாழ்வுதரும் அழகு தேவியோ? அன்றி வாணி தானோ?
அமைதி யோடுமிவ் வின்னல் பொறுத்தே அழுதி ளைத்த தேனோ?
எமது ராகவன் தேவிநீ ரெனில் என்னை வாழ வைப்பீர்
—உம-தின்னல் நீ ரொழிப்பீர்.' 118

கன்ன லமுதமெனக் கவிமனம் குளிரக் கற்பரசியும் சொல்வாள்
'மன்னு புகழரசன் தயரதன் மருமகள் மகள்நான் சனகனுக்கே—நீ
சொன்ன ராகவனின் தேவி யேனுமிச் சோகவாழ்வு கொண்டேன்
என்ன வாறவன் திருவடி களிலிவ் வேழை பிழைத்தேனோ?
—அறிவிழந் தென்ன விழைத்தேனோ?' 119

'வாழ்வை யுலர்த்திட மனங்கொண் டவெனை வாழ்த்தி வந்து நின்றாய்
தாழ்வி லாதபெரும் பதமே தரவல தாரக மோது கின்றாய்—நல்

ஊழ்வினை யோருருக் கொண்டது போல்நீ உருக் கரந்து வந்தாய்
யாமென வையனைப் பாடிடும் நீயெனக் காரென விளக்கிடுவாய்
—மனத்தெழு மையம் விலக்கிடுவாய்.' 120

அம்மையி னையம் களையவாங் கனுமன் அடிபணிந்து சொல்வான்
'உம்மை யிழந்தே உத்தமன் கண்ணி ருகுத்து வாடுகின்றார்
எம்மைப் போலவே ஏவல் கொண்டுமை எண்ணிலர் தேடுகின்றார்
இம்மையு மெம்மையு மழியாப் புகழ்கொள இன்றுமை நான் கண்டேன்
—இராகவன்-பணியில் ஜயம் கொண்டேன்.' 121

ஸ்ரீராம ஜெய … … …

'அண்ணலி னருமை நண்பரா மெமது அரச னுணை கொண்டே
எண்ணி லாதகவி யெங்கும் தேடுவா ரென்னினும் பெருவீரர்
இன்ன லேதுமக் கெமது கண்களில் இலங்கை பட்ட பின்பும்
விண்ண ளாவுமோ ருருவுகொண்டு கடல் விரைவில் தாண்டி வந்தேன்
—உலகுள-கவிகள் வாழ்வு தந்தேன்.' 122

'நாயக னேவிய தூதன் நானென்று நம்பித் தெளிந் திடுவீர்
ஆயிழை யுமைக்கண் டவர்சே மம்சொல அருங்கட லைக்கடந்தேன்
தாயுமைத் தலையால் தண்ட னிட்டதாய்த் தம்பி சொல்லச் சொன்னார்
வாயு மைந்தன்நான் வந்துமைப் பணிந்தேன் வஞ்சனை யேதில்லையே
—இதில்-சஞ்சல மேனினியே? 123

ஸ்ரீராம ஜெய … … …

## அத்தியாயம்—12

[இந்த அத்தியாயத்தில் நரர்க்கும் வானரர்க்கும் நேர்ந்த கூட்டுறவை அனுமன் ஆதியோடந்தமாகப் பிராட்டியினிடம் விளக்கிக் கூறுதலும், திருவடி ராகவனின் திருமேனி யழகுரைத்துப் பின் ஆழியை அருளுதலும் கூறப்படுகின்றன.]

[ராகம் - காபி]

அன்னை யாங்குசற் றையம் தீர்ந்துபின் னனுமனைக் கேட்டிடுவாள்
'என்னவா றுமைச் சேர்ந்தன ரென்கோ எனக்கவ ரழ குரைப்பாய்
பின்னவ னென்பிழை பொறுத்தெனைத் தேடப் போந்த விதமும் [சொல்வாய்
என்ன உருவுகொண் டிக்கடல் கடந்தாய்? எனக்குக் காட்டி வெல்வாய்
—எனதையம்—நீங்கச் சொல்வாய்.'
கேட்டனுமன் உரைப்பான்—அன்னையின்
வாட்டந் தன்னைக் குறைப்பான் 124

ஸ்ரீராம ராம் ராம் … …

மாதுனைக் காணு தவர்மனம் நொந்தே மருண்டு தேடி வந்தார்
தீதுனக் குற்றதைக் கழுகு கூறிப்பின் தீர்ந்தனன் புவிவாழ்க்கை
சூது கண்டிவர் கோபமோ டுலகைச் சுட்டெரிக்க முனிந்தார்
ஏது கூறிப்பின் இளவல் தேற்றிவர எம்வழி வரக் கண்டோம்
—அதிலெம-தின்னல் தீரக் கொண்டோம். 125

அவரைக் கண்டுநான் அடிமை பூண்டு என் அரசர் காண வைத்தேன்
விவரம் கேட்டுப்பின் இருவரும் நட்பே விரும்பிக் கொண்டனர் முன்
எவரும் காணநீ ரெறிந்த பூண்களை யெடுத்துக் காட்ட நாங்கள்
அவரும் கண்டனர் அழுதி ளைத்தனர் அம்மை! உம் பிரிவாலே
—தேறினர்-சிறிதெம துறவாலே.' 126

ஸ்ரீராம ஜெய ... ...

உனைப் பிரித்தவிச் சிறு வரக்கனை உலர வாட்டும் வாலி
தனை யழித்தனன் தனதொரு கணையால் தருமம் கொண்ட உருவன்
எனை யழைத்தவன் அருளினன் பின்னர் ஏகுக தென்திசை யென்று
அனைவரும் பெற்றோ மரச னாணையே யதி லொருவன் அடியேன்
—உமைக்-கண்டதில் புகழுடையேன்.' 127

ஸ்ரீராம ஜெய ... ...

'அழகைச் சொல்லு மென்றீர்—அன்னையே!
அதுவெனக் கெளிதாமோ?
பிழையிலாதஅவ் வைய னுருவமே
பிரம மென்ப ருலகோர்
—அதைப்பரப் பிரம மென்பர் கலையோர்.' 128

தாமரை தாளிடை யுதிக்குஞ் சூரியன் தங்கிடும் தச விரல்கள்
தூமத கரிகரம் தொடைகள் கங்கைநீர் துடித்துச் சுழலுஞ்சுழி யுந்தி
ஸ்ரீயுறை மார்பொடு நீண்ட கரங்களும் நின்ற சங்கு மி_றும்
காமுறு மென்போல் கவியவர் முகமே கண்டு சொல்லப் போமோ?
மறைகளும் விண்டு சொல்லப் போமோ? 129

ஸ்ரீராம ராம் ராம் ... ...

'அனங்கனைப் படைத்திட வைய னெழிலையே ஆதியன் மனங்கொண்டான்
இணங்கிக் கண்டவர் எங்கும் போற்றுவா ரிரவியென் றிவர் முகமே
மணங்கொள் தாமரைச் செவ்வரி விழிகள் மனத்தி னின்னல் தீர்க்கும்
பணங்கள் பூண்ட சிவன் திரிபுர மெரிசிலை பழிப்பது மவர் புருவம்
—பவ-மொழிப்பது மவ ருருவம்.' 130

ஸ்ரீராம ராம் ராம்

'புத்தியில் குருவை நிகர்க்கும் மேதையான் புல்லையும் வில்லாக்கிச்
சத்தி கூட்டிவிடும் சாமர்த் தியவான் சனங்கள் மெச்சு மரசன்
வித்தையி லினியவன் வேண்டுவ தொன்றிலே வேதியர் தம்மனமும்
தித்தித் திடக் கொடை தினமு மளிப்பவன் தீனருக் கோருறவன்
—அவன்-தீமை போக்கு முருவன்.' 131
ஸ்ரீராம ராம் ராம் ... ...

'அந்த மிலானவன் அழகுரைத் துமது ஐயம் நீக்க லரிதாம்—என்றே
தந்த னுப்பியுளன் தன்கணை யாழியை; தளையுமக் கேதினியே?
சிந்தனை யொழிப்பீர் சினமுள படையுடன் சீறு மையன் வாளி
வந்து மீட்பதுமை யொன்றே யுள தினி வருத்தம் நீங்குவீரே
—சிறிதின்னல்-பொறுத்து ஓங்குவீரே'—என
ஆழியன் மோதிரமே—அனுமனும்
அன்னையிடம் தந்தான்
ஊழி யிறுதிபின் உயிர ளிக்கும்தாய்
உண்டன ளமுதெனவே
—தன்-உயிருடன் அழகெழவே. 132

## அத்தியாயம்—13

[இந்த அத்தியாயத்தில் மிதிலைச் செல்வி மகிழ்ந்து அனுமனுக்குச் சிரஞ்சீவியாயிருக்கும்படி அருளுதலும், இராமபிரான் வந்து தன்னை மீட்டுச்செல்லுமாறு அவனிடம் சில செய்திசொல்லிச் சூளாமணியை அருளுதலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - ஸஹானா)

மலர்ந்த கண்களோ டையன் மோதிரம் மங்கை யாங்குக் கண்டாள்
உலர்ந்த மேனி செழித் துள்ளங் களித்திட உவகை கொண்டு பூத்தாள்
அலர்ந்த தாமரை விழிக ளின்பமழை யருவிபோன் றுதிர்த்தாள்
குளிர்ந்த உள்ளமே கொண்டு காட்டினள் குறுநகை யன்பெழவே
—கண்-டனும னவனைத் தொழவே. 133

மிதிலையில் தன்முன் மிடுக்கொடு நின்றவன் மேனி திகழக் கண்டாள்
பதிலுரைப் பதுபோல் அழகன் நாமமதில் பதிந் திருக்கப் பார்த்தாள்
அதையணைத் தவள் விழிகள் நீரினால் அலம்பி யானந் தித்தாள்
விதிவிளைத்த அவன் பிரிவு தீர்ந்ததென விம்மி இன்ப முண்டாள்
—எதிருள வனுமன் தன்னைக் கண்டாள். 134

'மீட்சியி லாவிருள் வீழ்ந்த வென்னைநீ மீட்டுச் செல்ல வந்தாய்
காட்சி ஐயனெழில் கணையா ழியதில் காட்டி வாழ்வு தந்தாய்
ஆட்சி யேழுலக மளிப்பினு மீடிலை அரிவை யென்தன் கற்பே
சாட்சி நீயிதுபோல் சீவித் தென்றும் சத்தியம் காத்திடுவாய்
—துதிப்பவர்-இடர்களைத் தீர்த்திடுவாய்.' 135

‘ மந்த பாக்கியம் பெற்றவ ளென்போல் மாதுலகில் உளரோ ?
சொந்த மானவென் நாதனைப் பிரிந்திச் சோக வாழ்வில் நின்றேன்
வந்தநீ யவர் வாழி யென்றசொல் வருத்தம் நீக்கி னாலும்
நிந்தை நீக்கியவ ரெனைக் கொளும் நாளெது நீயுரைத்தல் வேண்டும்
அவரை நான்-அடைவ தென்று மீண்டும் ?’ 136

அம்மை யன்பு மவள் சோகமும் கண்டே யனுமன் நைந்து நின்றான்
உண்மையி லாவழி ஒன்று ரைத்தனன் உத்தமி நகைத்திட்டாள்
இம்மை யோடுபுகழ் மறுமையு மடைவேன் இசைவொ டென்மி தமரும்
உம்மை மறுகணம் சேர்த்துப் பணிந்திட உத்தமன் கழலடியில்
—என தாற்றல் காணும் நொடியில்.’ 137

என்றவா றனுமன் எண்ணுதற் கரியதொ ரெழிலுருக் கொண்டிட்டான்
சென்று வானைத்தன் சிரமது முட்டவும் சிதறி மீன்க ளுதிர
நின்ற வாட்சியொடு நிருதர் புகழ்போக்கும் நிழலதைக் கண்டென்னே !
நன்று நாயகன் கொண்ட நட்பிதென நங்கை மகிழ்ந் திட்டாள்
—ஆற்றலைப்-பொங்கிப் புகழ்ந்திட்டாள். 138

‘ ஆற்றலோ டுனது அன்பு மாண்மையும் ஐயமின்றிக் கண்டேன்
ஏற்ற தானவழி யெண்ணி முடிப்போ மென்னை மீட்க வின்றே
போற்றுத லில்லா வழியெனை நீயிடைப் போந்து கொண்டு செல்லல்
சீற்ற மோடுபோர் நிருதர் மூட்டிடில் சிந்தை கலங்கிடுவாய்
—அவரைநீ-சினந்து விலக்கிடுவாய்.’ 139

‘ அன்றியு மையன் வில்லும் மாசுணும் அதனை நினைத்தாயோ ?
சென்றுநீ யெனது நிலையு ரைத்தவரைச் சேர்ந்து மீண்டு வந்தே
நின்று போர்புரிந் தென்னை மீட்பதே நேரிய வழியாகும்
ஒன்று முண்டுநான் உணர்வொடு வேற்றுவ ருடலம் தீண்டிடேனே
—அவ்வழி-சிறையும் மீண்டிடேனே.’ 140

‘ மன்னவ ரிடம்நீ சென்று என்நிலை மனங்கொளச் சொல்லி யவர்
முன்னை நினைவுதர முடிந்து வைத்துளேன் முடிமணி தந்திடுவேன்
அன்னவ ரிடமதை யளித்துச் சொல்லுவாய் அவர்மனம் கொண்டிடவே
இன்ன முயிருடன் இருப்பது சீதை இரண்டு பக்ஷ மென்றே
—இதற்கு ளவர்-ரக்ஷை வேண்டு’மென்றே. 141

ஸ்ரீராம ராம் ராம் ... ...

## அத்தியாயம்—14

[இந்த அந்தியாயத்தில் பிராட்டி தன் பிழைகளைப் பொறுத்தருளும்படி இராம பிரானிடம் கூறுமாறு சிலசெய்திகள் சொல்லுதலும், மற்றும்சில அடையாள மொழிகளையும் அருளுதலும், அனுமன் அவற்றையேற்று அவள் ஊக்கங்கொள்ளுமாறு சிலமொழிகள்கூறி அவளிடமிருந்து விடைபெற்று வெளிப்போதலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - ஸாவேரி)

தண்ணொளி வீசுமத் தலைமணி யன்னை தந்திடப் பெற் றனுமன்
பண்ணிய புண்ணியம் பலனளித் ததெனப் பார்த்து மகிழ்ந் திட்டான்
கண்ணி லொற்றியதைச் சிரமேற் கொண்டே களித்து மேலும் சொல்வான்
'அண்ணலைக் கண்டிங் கழைத்து வருதலினி யரைநொடியா' மென்றான்
—'அதை-யவள் பொறுக்கவேண்டு'மென்றான். 142

மேலு மையனிடம் சொல்ல வேண்டியவள் மேன்மை மொழிகள் கேட்டான்
சில மோடுதன் கற்பெழில் வீசுமிச் சிலமொழி யவள் தந்தாள்
'கோல மானைநான் வேண்டிய பேதைமை கோப மூட்டு மேனும்
ஞால மாளுமவர் பிழைபொறுத் தருளல் ஞாய'மென்று சொல்வாய்
—என்மனத்-தூயநிலையும் சொல்வாய். 143

'ஈன வாழ்வில்நான் இன்னு முயிருடன் இருப்பது மாத மொன்றே
தான தற்குமுன் தளர்ந்தெனை மீட்டல் தரும'மென்றும் சொல்வாய்
'ஆன மனைவிநான் அவர்பெருங் குணத்திற் கல்லளேனு மோர்பெண்
மானங் காத்தலை மதிக்க வேணு'மென மன்னரிடம் சொல்வாய். 144

'இத்துடனவர்மனம் அறியச் சொல்லுவா யிசைந்ததை முன்னோர் நாள்
சித்திர கூடம் சேர்ந்து வாழ்கையில் சிறிய காக மொன்று
வைத்த பலியினை டெந்தன் மார்பெழில் வியந்து கண்டு நின்றே
கொத்தினன் மார்பைக் குருதி சோர்ந்திடக் குலமக னுறங்கியதால்
—தனது கண்-முடிவு நெருங்கியதால்.' 145

'கண்விழித் தவர் கண்டு குருதியைக் கனன்று சீற்றங் கொண்டே
மண்கி டந்ததோர் புல்லெடுத் ததனை மந்திரித்து விட்டார்
எண்டி சைக்குமக் காக மோடவைத் தெரித்த தையன் வாளி
கண்டி ரங்கியும் தேவர் மூவரும் கைவிரித்து விட்டார்
—கதியிவர்-பாத மென்று தொட்டான்.' 146

'வந்தடி வீழக் கண்டனர் வள்ளல் இந்திரன் மைந் தனையே
நிந்தை போகவவ னிடது கண்ணையே நீக்கி யருள் செய்தார்
அந்தப் புல்லினு மிளைத்திலை யன்றே யின்றவர் கோதண்டம்—தன்
சொந்த வில்லென்று சொல்லி நான்படும் சோகம் போக்குவாயே
—இடையுற்ற-சிறையை நீக்குவாயே.' 147

'தூய்மை கண்டதிப் புவியவன் பாதம் தொட்ட கல்லின் பெண்ணால்
வாய்மை கண்டதும் வணக்கமோ டவன் வனம் புகுந்த வந்நாள்
பேய்மை போக்கியிவ் வுலகம் காக்கவவன் பெற்ற துணிவி லுற்ற—இத்
தாழ்மை நீக்கியவர் வீரம் காத்தலிது தருண'மென்று சொல்வாய்
—'என்னிடம்-கருணை வேண்டி வெல்வாய்'. 148

காந்து மென்னிலைக் கிரங்கி ஐயன்வரக் காரணமும் உளதோ?
வேந்தன் வரவுபார்த் தேங்கி வீணில்நான் விடினு மெந்த னுயிரை
போந்து நீயவர் புனித மானகை பூண்டு பவித் திரமும்
ஏந்தி நீருடன் எவரும் காணவெ னக் கேமம்செய்ய வைப்பாய்
—செய்தெனே-நல்லுலகம் உய்ப்பாய்.' 149

எழு பிறப்பிவை கொளினு மேழைநான் ஏற்றம் வேண்டி யன்னார்
வழு விலாதநல் லடிமை செய்யுமில் வாழ்க்கை வேண்டு மென்பாய்
தொழு திறைஞ்சினுள் வரமி தோடுமவன் தூய வாழ்வி லென்றும்
பழு திலாதநல் லேக பத்தினிப் பண்பு வேணு மென்பாய். 150

'என்ன சொல்லியா னென்னிலை யவர்க்கிங் கெடுத்துரைத் தல்கூடும்?
மன்னவ ருன்னுரை கேட்டெனக் குயிர்தர மகிழ்ந்து வருதல் தேடும்
அன்னவர் பிரிவெனக் கழுகை யூட்டிமன மவரை வேண்டி நாடும்
இன்னு மவர்வர விருப்பது மாதமென் றெண்ணில் நாட்க ளோடும்
—சொல்-அவர் வரப் படை யோடும்.' 151

நிலைதளர்ந்த அன்னை—சொல்மொழிகள்
பலபல அவன் கேட்டான்
தலைவியைத் தேற்றிப்பின் தனிவழி செலவவன்
தரவிடை வேண்டிட் டான். 152

'மாத மொன்று சொன்னீர்—அதுவரை
மன்ன னுயிர் தரியான்
சேதிசொல்வ தொன்றே—மறுகணம்
சேருவ னிலங்கைக்கே.'

ஸ்ரீராம ராம் ராம் 153

'அறம் ஒழிந்தவிவ் வரக்கர் கூட்டமினி அழிந்ததாக எண்ணும்
வரம் ஒழிந்ததினி ஐயன் வாளிபல வந்தி லங்கை யுண்ணும்
திற மழிந்திவர் திசைதிசை யோடிடத் திரண்ட படைகள் நண்ணும்
உரமிழந்திவர் உரறி வீழ்வதை உவந்து காணும் விண்ணும்,' 154

என்றவா றனும னேந்திழை தன்னை யேத்தி வலம் வந்தான்
அன்று போகவவள் அருளொடு விடையும் ஆசி வேண்டி நின்றான்
நின்று கண்கள்நீர் மல்கக் கண்டனள் நின்மலன் வேண்டுவதைச்
'சென்று செயமுடன் சிறப்படை வா' யெனச் சேயிழை யருள் தந்தாள்
—அனுமனும்-தாவிப் புறம் சென்றான். 155

ஸ்ரீ ராம ஜெய ஸ்ரீ ராம ஜெய ஸ்ரீ ராம ராம்.

## அத்தியாயம்—15

[இந்த அத்தியாயத்தில் அனுமன் விசுவரூப மெடுத்து அரக்கருடன் போர்செய்தற்கு அறை கூவுதலும், பின்னர் அசோகவனத்தையும் மற்றும் பலவற்றையும் அழித்தலும், சிங்கரரிருவர் இராவணன் ஏவலால் அனுமனிடம் போரிட வருதலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - உசேனி)

வந்த வனுமன்மேல் நடக்க வேண்டியதைச் சிந்தை செய்யலானுன்
'இந்நகர் தனை நான் இருளில் கண்டதால் இதனமைப் பையு மறியேன்
விந்தை யானவிதன் அரசனேடு படை விளங்கக் காண கில்லேன்
நிந்தை யாகுமென் பணியிந் நிலைதனில் நீத்துச் செல்வ னுகில்.' 156

'போரை மூட்டிவிட்டே-என்னை
யாரெனக் காட் டிடுவேன்!
நேரிடை யரசனைக் கண்டவனுக்கே
நேர்மை பலவும் சொல்வேன்'—என 157

எண்ணி யனும னுங்கே-பின்
விண்ண ளாவிநின்றுன்
கண்கொ ளாதவக் காட்சி கண்டுசொல
காவல ரோடினரே
—போரிட—ஏவலர் கூடினரே. 158

இலங்கையு மெதிரொலி கலங்கிக் கண்டிடப்
பலங்கொளும் தோள்களைப் பரிந்து கொட்டினுன்
விலங்கொடு புட்களும் வீழ்ந்து மண்ணிடைக்
கலங்கிய திலங்கையும் கண்டதோர் புயல். ஸ்ரீ ராம ராம் ராம் 159

வான் பிளக்க வனுமன்-தன்
வாய்விடுத் துரைப்பான்
'நான்பணி பூண்டவி ராமன் வாழியென்
நாயக ரும்வாழி
—ஜய-நாயகரும் வாழி'. 160

மண்ணெ ழுந்தமா மரமது கொண்டே
விண்ணெ றிந்துவான் மலரொடு தூர்த்திடப்
பண்ணி ழுந்தவப் பறவைவி லங்குகள்
கண்ணி ழுந்துபின் கதறி யிறந்தனர் ஸ்ரீ ராம ராம் ராம் 161

உருவங் கண்டவர் உள றி விழ்ந்திடத்
தருவைத் தோண்டிப்பல தருவைச் சாடினன்'
பெருமையோ டரக்கர் பேணி வந்தவனம்
உருக்கு லைந்ததன் உண்மை கண்டனர். ஸ்ரீ ராம ராம் ராம். 162

பறித்து வீழ்த்தினன் பலபல கொடிகளை
நெரித்துத் தூர்த்தனன் நீர்நிலை வாவிகள்
சிரித்து டைத்தனன் சிலைகளாங்குபல
சரித்து வீழ்த்தினன் சந்திரக் கற்களை. ஸ்ரீராம ராம் ராம் 163
பளிங்கு மண்டபம் பலபழு தாயின
களங்க மற்றபல கற்சிலை யிற்றன.
உளங்கொ தித்தெதிர் வந்தனர் காவலர்
விளங்கு மவரைவான் வீசி நின்றனன். ஸ்ரீராம ராம் ராம் 164
இந்த வா றனும னிலங்கு வனமதை
விந்தை யாய்நொடியில் விசும்பு வீசினன்
அந்த நிந்தையா லரக்கர் பேசினர்
வந்த வானரன் இந்திர னுளனு. ஸ்ரீராம ராம் ராம். 165
அன்னை தங்குமர மன்றி வேறெலாம்
சின்ன பின்னமாய்ச் சிதறு வித்தனன்
மன்ன னேவல்செய் மங்கையர் மருண்டே
அன்னவ ரிடம்புக லன்ற டைந்தனர். ஸ்ரீராம ராம் ராம் 166
மாருதி மலைபொடித் தொலி விடுப்பதும்
காரிகை யரக்கியர் கலங்கிச் சொல்வதும்
நேரிடை காவலர் நெகிழ்ந்து நிற்பதும்
'யாரிது?' வெனமன மரக்கன் சீறினன். ஸ்ரீராம ராம் ராம் 167
'இலங்கை யோர்நொடியில் கலங்க வைத்ததோர்
விலங்கு செய்ததாம் விந்தை விந்தையிது!
கலங்கி டாததனைக் கட்டி வருக'வென
இலங்கு கிங்கரர் இருவ ரேவினன். ஸ்ரீராம ராம் ராம் 168
தங்கு மனுமனோர் திங்க ளெனவிழுங்கப்
பொங்கிக் கேதுவொடு போந்த ராகுவென
எங்கு மரக்கர்படை யேந்திச் சூழவும்
கிங்கர ரிருவரு மங்கு வந்தனர். ஸ்ரீராம ராம் ராம் 169

## அத்தியாயம்—16

[இந்த அத்தியாயத்தில் கிங்கரர் வதையும், அனுமன் சம்புமாலியை வதைத்தலும் கூறப்படுகின்றன.]

(ராகம்-அடாணு)

அரக்கன் வரவு கண்டான்—உவகையுடன்
உரக்கக் கூவி நின்றான்
நெருக்கிப் புடைத்திட நீண்டு பருத்ததோர்
இருப்புக் கம்பம் கண்டான்.
—அதனை-மறுகணம் கைக்கொண்டான். 170

சுழலும் வேகம் கண்டே—பலவரக்கர்
சுருண் டிறந்து வீழ்ந்தார்
அழலைக் கக்குமா றதைச் சுழற்றியே
அரக்கரை மாய்த்தனனே
—அனுமனும்-அவர்களைத் தேய்த்தனனே. 171

வாலைக் கண்டு பயந்தே—வேறுசிலர்
வந்த வழியே சென்றார்
காலொடு கைதலை கழிய வேறுசிலர்
கதறி வீழ்ந் திறந்தார்
—உடல்-பதறி மெய்ம் மறந்தார். 172

கிங்கரர் தன்முன்னே—அனுமனும்
பொங்கி வருதல் கண்டான்
அங்கையா லவரை யறைந்திட வாங்கே
அறிவு கலங்கி வீழ்ந்தார்
—மறுகணம்-பிரிய உயிரும் சாய்ந்தார். 173

தலைவ ரானவக் கிங்கரர் வீழ்ச்சியில் தளர்ந்து சேனை யெல்லாம்
கலைய லுற்றதாங் கெஞ்சிய படைகள் கடுகி யோடக் கண்டான்
தொலைவி லாதுபோர் மீள வேண்டித்தன் தோள்கள் தினவு கொண்டான்
வலையை வீசுமோர் வேடன் போல்நிருதர் வரவு பார்த்து நின்றான்
சிலருமிச்-சேதிச் சேர்க்கச் சென்றார். 174

இருபது செவிகளும் கேட்டுப் பொங்கின னிதுவரை கேட்டிலனே
வருவது மபஜயம் நிருதருக் கென்றதொர் வசைமொழி ராவணனே
பெருகு கோபமோ டாங்கு நின்றபல பெரிய வீரர் கண்டான்
அருகு நின்றவன் சம்பு மாலியதை யறிந்து விடை கொண்டான். 175

'குரங்கு பிடிப்பது வீரர் பணியிலை குறித்திடி லதனை நீர்
வரவழைத் ததை வாலுட னும்முன் வருந்தி யாட வைப்பேன்'—எனப்
பெருமித முடனவன் நிருதர் வீரர்பலர் புடைதனைச் சூழ்ந்திட்வே
வருவது கண்டனன் வகுத்த பெரும்படை வளர்ந்து நின்ற அனுமன்
—போர்-உள முவந்த நினைவன். 176

ஒளிவிடும் வாள்வில் தோமர மோடவ ரோலமிட்டு வந்தார்
களியொடு மதவெறி யானைக ளோடவர் காலனென விரைந்தார்
திளைத்திடாத பரி பூட்டிய தேரில் திமிர் பிடித்து நின்றார்
வளைத்த வில்விடுத் தனுமனை வாட்டிட வாளி மழைகள் பெய்தார்
—'குரங்'கென-வாயினாலுர் வைதார். 177

'சிரா மஜயம்' என்றே யனுமன் சிறிவா னெழுந்தான்—அவன்
போராற் றலதைக் கான விண்ணவர் போந்தனர் வான்வழியே
நீரேற் றபெரு மேக மெனவானில் நிலையிலாது சுழன்றான்
தேரோ டுபடை யழியப் பூமியில் தேய்த் தொழிக்க லானான்
—கண்டவர்-பேய்த்தொழி லதுவென்றார். 178

வான் நிறைந்தபல வாளிக ளிடையே
தான் வளைந்து சென்றே
ஊன் குவித்தவன் இலங்கை நனைந்திட
உதிரம் பொழிந்தனனே
—அரக்கர்-அதிர முழங்கினனே. 179

சம்பு மாலியும் கண்ட யர்ந்துமேல்
அம்பு மந்திரித் தெய்ய வனுமனும்
துன்ப முற்றனன் தோள்கள் தட்டினன்
முன்பு வந்தவன் தேர் முறித்தனன்.
ஸ்ரீராம ராம் ராம் 180

குருதி கண்டிடக் குலிச மொன்றினால்
நிருதன் சாடினான் நிலமி ருந்தவன்
அறுதி வைப்பதென அனும னெண்ணினன்
மருங்கி ருந்ததோர் மலை பிடுங்கினன்.
ஸ்ரீராம ராம் ராம் 181

மரம டர்ந்தவம் மலை பிடுங்கியே
விரைவில் சாடினன் வீய வீழ்த்தினான்
குறைவில் சேனையும் குலைய வெஞ்சியோர்
அறைய வோடின ரரக்க னுக்கிதை.
ஸ்ரீராம ராம் ராம் 182

## அத்தியாயம்—17

[இந்த அத்தியாயத்தில் சம்புமாலி இறந்தது கேட்டு இராவணன் துயருறுதலும், பஞ்சசேனாபதிகளின் வதமும் கூறப்படுகின்றன.]

(ராகம் - கமாஸ்)

கம்ப ராலுமோ ரெல்லை கண்டிராச்
செம்பொ னேடுசெயம் சேர்ந்த ராவணன்
சம்பு மாலிபோர் செய்தி றந்ததை
வெம்பிக் கேட்டவன் வெந்துரைத்தனன்.
ஸ்ரீராம ராம் ராம் 183

'விலங்கி தாகுமோ விருது கூறியிவ்
விலங்கை வீரமே இழிவு செய்திடில்
இலங்கு தேவரென் னிறுதி தேடவிப்
பலங்கொள் தூதனைப் படைத்த தாகுமே.'

ஸ்ரீராம ராம் ராம் 184

கஞ்சி வந்தழல் கக்க வாங்கவன்
விஞ்சி தைக்குந்தன் வேலை நோக்குவான்
அண்மை நின்றபடை யைவர் தலைவர்கள்
'உண்மையான போர் உளது பின்னரே: 185

அரக்கர் வீரமிதற் கழிவு முள்ளதோ?
குரக்குக் கண்டதோர் குன்று மணியதே
வருக்க மோடுகுலக் குரக்கி லாதுலகு
இருக்க வேண்டில்நீர் எமை யனுப்புவீர்'
என்றன ரிவ்வணமே—நன்றென்றனன் ராவணனே

—ஸ்ரீராம ராம் ராம் 186

கடல்கொ திப்பெடுத் திடையி ருந்ததோர்
மடைதி றந்ததென மலியும் சேனையை
உடல்து டித்தனும னுற்று நோக்கினன்
அடல்மி குந்ததில் ஐவர் கண்டனன்

—ஸ்ரீராம் ராம் ராம் 187

மருங்கி ருந்ததோர் மரா மரமதைப்
பெருகு கோபமொடு பெயர்த்தெ டுத்தனன்
'வருகநீ' ரென்று வால் சுழற்றிப்பின்
சிறகு பெற்றதோர் சிகர மாயினன்

—ஸ்ரீராம ராம் ராம். 188

'வாழி மன்னவன் சுக்ரீ வனும்நான் வழிபடு ராம்'னென்றான்
ஊழி யுலகுணும் தீயென வானில் உலவி மாய்க்கலானான்
ஆழி போன்றவச் சேனையெ லாமவ னலறிமாள வைத்தான்
நாழி யொன்றிலவ் விலங்கை யெலாம்பிண நாற்றங் காணச் செய்தான்.189

கோப மூண்டவத் தலைவ ரைவரும் கொண்ட வில்லின் வந்த
சாபம் பலவகை மந்திரம் தாங்கிச் சாடிய தனுமனையே
தாப மோடுடல் குருதி சோரவவன் தளர்விலாது வெகுண்டான்
தூபம் கக்கவிழி துணிந்தன னைவரைத் தொலைத்திட வக்கணமே. 190

அறைந்ததன் வேரொடு பிடுங்கின னனுமன் அருகுள மலையொன்றை
கரைந்து பூமியிரு பிளவு காணவும் கதறிய திலங்கை நகர்
விரைந்து சாடினன் நிருத ரைவரும் விழுந்தி றக்கக் கண்டான்
உறைந்த துள்ளமிதைக் கேட்ட ராவணன் உதடு துடிக்க நின்றான்.
ஸ்ரீராம ராம் ராம் 191

வெற்பெ டுத்தன் தோள்சிரிக்க வவன் வெட்கி யுள்ளம் நொந்தான்
'அற்ப மில்லையிக் கவியி னாற்றல்பலர் அழியக் கண்டும் நம்மில்
விற்பி டித்தபெரும் வீரர் வாழ்கின்றோம் வீரம் பேசுகின்றோம்'—எனும்
சொற்கள் கேட்டவவ் வட்ச குமாரன் சூரனென் றெழுந்தான். 192

'நிந்தை வாராமல் தந்தை காப்பதுவும்
மைந்தன் கடன்' என்றான்
விந்த யானவக் கவியைக் கட்டிவர
விரைந்து விடை கொண்டான்.
ஸ்ரீ ராம ராம் ராம். 193

## அத்தியாயம்—18

[இந்த அத்தியாயத்தில் அட்சகுமாரன் போர்க்கு எழுதலும், அவனை அனுமன் வதைத்தலும், இந்திரசித்து அனுமனோடு பொர எழுதலும் கூறப்படுகின்றன.]

**(ராகம் - கேதார கௌவம்)**

நன்றென வவனை யேவி ராவணன் நலிவி லாத சேனை
ஒன்றைப் போர்புரிய உடன்வி டுத்தனன் ஓர்ந்தனன் ஜெய மென்றே
'குன்ற வானரன் கொட்ட மவனைநீ கொண்டி டாது போயின்
கொன்று வீரமதைக் காப்பது கட'னெனக் கோபம் பொங்கச் சொன்னான்
—மைந்தனும்-சாபம் தாங்கிச் சென்றான். 194

வான் மறைக்கப் பெரு மண்கிளப் பியவ் வாரிபோன்ற சேனை
ஆண்மை சூலிக்கை யசனி போன்றபல வாயுதம் தாங்கிடுவார்
மேன்மை யானவரம் மந்திர வாளொடு மேக வொலியுஞ் செய்தார்
தான் மகிழ்ந்துவரும் தானை கண்டனன் தாசரதியின் தூதன்
வானெழுந்து நின்றான்—வால்திரியத்
தான் சுழன்று வென்றான். 195

'நான்பணி யாற்றுமென் னரசன் வாழிசெய நாயக ரும்வாழி
ஊன் பரப்பிநகர் உலர வாட்டுவேன் உத்தமன் பணி' யென்றே
இடிமுழக்கம் செய்தான்—மலைகளைப்
பொடிவிழ மேல்பெய்தான்—ஜய மாருதி ராம் ராம். 196

மந்தர மெனவச் சேனை வாரியை மாருதி கலக்கிடுவான்
வெந்தி றந்தனர் வெகுண்டு சுழலுமவ் வேகம் கண்ட நிருதர்
அந்தரம் வானவ ரார்த்துக் கண்டனர் அனும னாற்றல் தன்னை
விந்தை யாயவனு மரக்கர் சேனையை விண்ணி றைக்க லானான்
—வானவர் பண்ணுரைக்க லானார். 197

அலைந்து வந்தவச் சேனையெ லாமாங் கலறி யோடலுற்ற
நிலை கலக்குமவ் வனும னாற்றலை நிருதன் மைந்தன் கண்டான்
சிலை யிலங்குதனி வாளிக ளவன்மேல் சீறிப் போகவிட்டான்—வீரக்
கலை விளங்குமச் சிறுவனாற்றலைக் கண்டு கவி மகிழ்ந்தான்
—போர்மனம்—கொண்டு மிக நெகிழ்ந்தான். 198

மந்திர வாளிகள் மழையெனச் சிறுவன் மாருதி மேல் விட்டான்
அந்தரம் கிளம்பின னவைகள் வாட்டவும் அறிவு பொங்க லுற்றான்
'நிந்தை தாங்குமிச் சிறுவ னோர்விடம் நிருதர் கூட்ட' மென்றான்—எதிர்
வந்தவன் தேரொடு மிளைஞனை யாங்கே வாரிவிண் ணெறிந்தான்
—விழுமவனைச் சிறிப்பின் அறைந்தான். 199
ஸ்ரீராம ராம் ராம்

அட்ச குமாரன் ஆங்கி றந்ததை
லக்ஷம் வீரர் கண்டார்
அச்சங் கொளாதவர் யாரு மிலங்கையில்
மிச்ச மில்லை வீரர்.
ஜயமாருதி ராம் ராம் 200

இந்திர சித்தின் பின்னவ னாங்கே இறந்த செய்தி கேட்டான்
வெந்தனன் மனமும் வெகுண் டெழுந்தனன் வேந்தனி ராவணனே
சொந்த மாகப்போர் செயத்து ணிந்தனன் சோர்ந்தனர் வானவரும்
'எந்த வாறினித் தரும மோங்கு'மென ஏங்கி மனம் நொந்தார்
—போர்—காண வானில் வந்தார். 201

வேகமோடுதான் போர்செல வேந்தன் வேண்டு வனவும் செய்தான்—கண்டே
மேக நாதனவன் மைந்த னெழுந்தான் மேவி விளம் பிடுவான்
'நாக ரோடமர ரிந்திரன் புகழை நலியச் செய்த பின்னர்
போகவெண்கிறீர் போர்செயக் குரங்கொடு போதும் நிந்தை!' யென்றான்
—'இது—கால விந்தை !' யென்றான். 202

'வந்த மர்க்கடத் தாற்ற லோடுடல் வன்மை கண்டி டாமல்
சொந்த மானபல நிருத வீரரைச் சொர்க்க மேற்றி விட்டீர்
சிந்தி யாமல்நாம் பெற்ற புகழெலாம் சிதற விட்டுப் பின்னே
விந்தை நேரில்நீர் போர்செய வெண்ணுதல் வினையும் நிந்தை' யென்றான்
—'விடை—அருளும் எந்தை !' யென்றான். 203

இந்திர சித்துரை கேட்டான்—விடை
தந்த னுப்ப இசைந் திட்டான்
'முந்தை யாரின்வழி வந்த நம்குலம்
முறை நிறுத்தி செயம் கொள்வாய்
—இப்பய-மறுத்தவனே வெல்வாய்.' 204

சிறிய வானரன் என்று நீயவனைச் சிதைக்க வெண்ணிடாதே
அரிய தானவுன் வச்சிர மவனுட லணுக மழுங்கிடுமே
பெரிய தானவுன் சேனையெலா மவன் பெருமூச்சா லழியும்
குறுகி நீயவனைக் குத்திடி னுன்னைக் கொளுத்தும் தீயென் றறிவாய்
—அவனுளம்-அறிந்து வெற்றி பெறுவாய்.' 205

குலிச மோடுவில் தோமரம் தாங்கிய குதிரை வீரர் கொண்டான்
மலியும் யானைதேர் மந்திரம் கற்றதொர் மாபெரும் படை கொண்டான்
பொலியும் தேரிலவன் தந்தை யாசியொடு போரிடப் புறப்பட்டான்
வலிவு கொண்ட உடல் குருதி வழிந்திடும் வானரன் முற்பட்டான்
—வீரம் கண் டாச்சரியப் பட்டான். 206

போரினைப் புருத—அனுமனும்
நேரி லவனைக் கண்டான்
'யாரிவ னிந்திர சித்தனோ?' வெனப்
போரில் மனங் கொண்டான்
—ஜய மாருதி ராம் ராம். 207

## அத்தியாயம்—19

[இந்த அத்தியாயத்தில் இந்திரசித்தின் போரும், அனுமன் பிரமாஸ்திரத்தால் கட்டுண்டு இராவணன் சபை யடைதலும், பிரஹஸ்தன் அனுமனது வரலாற்றை வினவுதலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - கல்யாணி)

இறந்த வீரரைக் கண்டு மனத்தே இந்த்ரசித்து நொந்தான்
மறந்து போரை யவன் வீரம்கண் டாங்கு மாருதியைப் புகழ்ந்தான்
சிறந்த வாளிபல செலவிடுத் தவன் சினத்தை மூட்டக் கவிமேல்
விரைந்த வாளிகளக் கவியுடல் பட்டே விழுந்து மழுங்கிற்றே
கவியும்—எழுந்து முழங்கிற்றே. 208

அரக்கன் மைந்தனையங் கனுமன் கண்டவ னுற்றல் மனம் கொண்டான்
'பிறக்க வீரம்நம் ப்ரபுவொடு போர்செயப் பின்னுள' னெனக் கண்டான்
பறக்க வவன்விடும் வாளிகளைத் தான் பறித்தொடித் தெறிந்தான்
வருத்திய வம்புகள் வாயை விட்டவன் வான்சுழன்று திரிந்தான்
—அவன்-மேல்விழ மலை யெறிந்தான். 209

கண்டி ராதவிப் போரைக் காணவான் கவிந்தன ரன்றமரர்
எண்டிசை யானைகள் கலங்கிடப் பேரொலி யெங்குஞ் சூழக் கேட்டார்
பிண்டி பாலம்தோ மரமொடு குலிசம் பிறிதுள படை களையும்
துண்டு செய்துவா னெறிவதை யரக்கன் துடித்துக் கண்டு நின்முன்

'மந்திரம்–விடுத்துக்கொல்வ' னென்ருன். 210

அரக்கன்—நாகர் படையை விடுத்தான்
அனுமன்—நலியக் கருடன் நினைத்தான்;
அரக்கன்—தீயைப் போக விட்டான்
அனுமன்—பாயநீரைக் கேட்டான்;
அரக்கன்—விந்தை வாயு விட்டான்
அனுமனும்—தந்தையைக் கும்பிட்டான்;
அரக்கன்—மழையை யேவி விட்டான்
அனுமனும்—அழியத் தீயையிட்டான்.

—ஜய மாருதி ராம் ராம். 211

விஞ்சை யாலும்பல வாளி யாலும்கவி துஞ்சிடாது கண்டான்
எஞ்சி யுள்ளவம் மலரவ னம்பை யெடுத்தவன் கைக்கொண்டான்
'வஞ்சியா திவனைக் கட்டிவாரு'மென வாயில் மந்தி ரித்தான்
அஞ்சிடா தனுமன் ஆங்குதன் வலியு மழியக்கண் டதிர்ந்தான்.

—ஜய மாருதி ராம் ராம் 212

மனத்துளே யனுமன் வெகுண்டு கண்டனன் மந்திர வலியதனை
பிணைத்துத் தன்னைக்கி ழிழுத்து வந்ததொரு பிரமன் வாளியென்றே
நினைத்துத் தாதைமன முரைப்பது கேட்டான் 'நின்றிடு நாழி' யென
அணைத்து முணர்ந்தன னரக்கனைக் கண்டிட அதுஒரு வழியென்றே

—தான் அடங்குதல் சரியென்றே. 213

ஒப்பி லாதபெரும் பிரமன் வாளியதை யொன்று செலவு செய்தே
துப்பி லாதகவி கட்ட நேர்ந்ததெனத் துடித்தன ரிந்த்ர சித்தே
அப்பொழு தாங்குள படைக ளார்த்துபின் னனுமனை யண்டி–அவன்
தப்பிடா துடலைக் கயிறு சங்கிலிகள் தங்கக் கட்டினரே

—அத்திரம்–மங்கி விட்டவாறே. 214

பிணைத்த பாசந்தனை விட்ட தறிந்தான் பின்னும் தணிந் திட்டான்
மனத்தி லரக்கனைக் காணு மாசையால் மருங்குள ரிதை யறியார்
வனத்தில் வாழுமிக் குரங் கிலங்கையை வருத்தக் கண்ட பலரும்
சினத்தி னுலதனைச் சீறிக் கண்டுபின் சிரித்து ஆர்ப் பரித்தார்

—கவிமனம்–பொறுத்துளம் பூரித்தான். 215

களித்துச் சூழப்படை காவலருடனே கடுகிப்போக விட்டார்—அரக்கர்
அலுத்த வனுமனை இலங்கை காணவே அழைத்துச் செல்ல லானார்
பலத்த கட்டுடன் பற்ற நின்றவவன் பலரும் பேசக் கேட்டான்
செலுத்தத் தன்னையாங் கரசன் மாளிகை சேர்ந்தது கண்டிட்டான்
—செவிவிழும்-வசைகளை யுண்டிட்டான். 216

அரசன் சபையைக் கண்டான்—அனுமனும்
ஆச்சரியம் கொண்டான்
அறிய மேலுமவ னுங்குள பலரையும்
அடக்கம் காட்டி நின்றான்.
ஜய மாருதி ராம் ராம் 217

கலையொடு தவமது பொலியுமச் சபைதனைக் கண்மலர்த்திக் கண்டான்
நிலைசொல வியலா நீண்ட செல்வமதை நினைத்து வியப் புண்டான்
தலைவன் ராவணனின் ஒயிலு மாற்றலும் தருமமற்ற வரசும்
விலை யிலாத பல கலைத்திற னும்பணி விண்ணவர் செய்திடலும்
கண்-டெண்ணி வியந்திட்டான். 218

ஆங்குள வரக்கர் இந்திர சித்தனுக் காசியொழிந்திட்டார்
ஓங்கிக் கட்டுடன் ஒளிவிடு கவிகண் டோலமிட்டுச் சிரித்தார்
தாங்கி டாதபெரும் வசையை ராவணன் தன்மன மோர்ந்திட்டான்
'தீங்கி லாதவிவ் விலங்கையி லேனிவன் திரிவ?' தென்று கேட்டான்
—அது-தெரியக் கேள்வி போட்டான்;
அவையுள ரதைக் கேட்டார்—ப்ரஹஸ்தன்
கவியைக் கேள்வி போட்டான்—ஜய மாருதி ராம் ராம். 219

'அறிவு மாண்மையும் விளங்கக் காண்கிரு யற்பக் குரங் கெனினும்
நரியொரு சிங்கக் குகை யடைந்ததென நலிவை யெண்ணி டாமல்
பெரிய தானவிவ் விலங்கை நகரில்நீ பேயென ஆடிட்டாய
அறிய உரைத்திடு யாரென நீயெம் மரச ரறிந் திடவே
—உன்மனப் பயமு மொழிந்திடுமே.' 220

'வானவ ருன்னை வேவு கண்டுவர வழியனுப்பி னாரா?
ஏன மானவம் முதலவன் பணித்த ஏவல் கொண்டு ளாயா?
தானி லங்கைநிலை கண்டு வரவமரர் தலைவ னேவி னனா?
சேனை பூதகணம் சேர்ந்த சங்கரன் சேவை யேற்று ளாயா?
சிந்தை கலங்கா துண்மை நவில்நீ
நந்தி யேற்ற உருவா!
—வந்த-மந்தியாய பகைவா!' 221

எழுந் தனுமன் உரைப்பான்—தருமமதை
மொழிந்தவர் கண்திறப்பான்—காதில்
விழுந்த ராவணன் மனத்திடை கோபம்
கொழுந்துவிட வெரிப்பான்—ஸ்ரீராம ராம் ராம். 222

## அத்தியாயம்—20

[இந்த அத்தியாயத்தில் அனுமன் இராவணனுக்கு நற்புத்தி கூறுதலும், இராவணன் சினந்து அனுமனைக் கொல்லும்படி அரக்கரை ஏவுதலும், அதனை விடணன் தடுத்துரைத்தலும், அனுமன் வாலில் அரக்கர் தீயிடுதலும் கூறப்படுகின்றன.]

(ராகம் - கரகரப்ரியா)

'ஆண்மை யோடுபுக ழறிவு மாற்றலுள அரக்க ரதிபனே ! கேள்
ஊண்வசப் பட்ட உனது மந்திரிகள் உற்ற கேட்டை யுரையார்
மேன்மை யானவுன் தவபல மொடுபிறர் மெச்சும் வீர மெல்லாம்
தான்மறைந்திடுங் கால முற்றதுன் தாயைக் காதலித்தாய்
—காமத்தால்-மனமும் பேதலித்தாய்.' 223

நீயு ரைத்தவத் தேவர் மூவரின் நீச வடிமை யல்லேன்
பேயு னக்கெனப் பிறந்த வாலியின் பின்னவன் சுக்ரீவன்
போயு ரைக்கவென ஏவிய சேனையின் பெரிய திரளி லொருவன்
தாயு ரைக்கமுன் தண்டகம் வந்தவத் தாச ரதியின் தூதன்
—நான்-தாச ரதியின் தூதன். 224

அவரைப் பற்றிநீ யறிந்தி ருக்கலா மறுந்த மூக்கு தன்னால்
சிவனும் பிரமனும் மாலு மொன்ருகச் சேர்ந்து வந்த தருமம்
தவமுங் கொண் டுலகு காக்க வில்லதே தாங்கி நிற்கு முருவம்
உவகை யோடுகரன் உற்ற தூஷணனை ஒழித்த வீரங் கண்டாய்
—உணராதுன்-னழிவு தேடிக் கொண்டாய். 225

மூவ ரேனுமெத் தேவ ரேனுமவன் முனிந்து விட்ட பாணம்
ஆவி போக்குவதை யழிக்க வல்லரிலை யஞ்சிநீ யடைந்த
மாவலி வாலியின் மார்பு பிளந்ததம் மனித னற்பவாளி—அவன்
தேவியை நீசிறை வைத்தபின் னினியும் தேறுவ துனக் குளதோ ?
—தருமமதைத் தேய்க்கத் தீமை வலிதோ ? 226

'ஈன மானபெண் ணாசை கொண்டவர் இருந்து வாழ்வ துண்டோ ?
மான மோடுபெரு வாழ்க்கை வேண்டில்பிற மங்கை தேடு வாரோ ?
வானம் வையம்கீழ் எதுவு மையன்சிலை வழி தடுக்க வலிதோ ?
ஊன முற்றுனது வம்ச மோடுநீ உலர வேண்டு வாயோ ?
—அதற்கோர்-குழியைத் தோண்டு வாயோ ? 227

'ஒன்றே வழியுள துயிருட னிலங்கை யுள்ளதாக வேண்டில்
சென்றே ராகவன் பாதமதில்நீ சேர்த்திடு சீதைதனை
நன்றே சொல்பவர் நகைபடச் சொல்லார் நலிவுதே டிடாதே
அன்றே யோர்பெரும் அழலை யிலங்கைக் கள்ளி வாரிவந்தாய்
—காமத்தால்-தேய்ந் தெரிந்து நைந்தாய்.' 228

அரக்கன் வாழ்வதற் கனும னிவைகளை
யறிவு கொள்ளச் சொன்னான்
பிறக்கக் கோபமவ் வரக்க னனுமன்மேல்
பிழைகள் கூற லானான்
—அவன் அறிவு மாறலானான். 229

சிவந்த கண்களோ டுதடு துடிக்கச் சீறி யரக்கர் வேந்தன்
'உவந்து நியற்ப மனித னொருவனை யுரைத்த பெருமை போதும்
துவண்ட ரக்கர்பலர் மாளவைத் ததுமுன் துடுக்கது வோ?'வென்றான்
'அவணம் செய்ததுனைக் காண வேணுமெனு மாசையினா' லென்றான்
—அனுமனும் பேசவேண்டி நின்றான். 230

பொங்குங் கோபமது வான் பொரிந்திடப் புகைந்த ரக்கன் புகல்வான்
தங்கும் பழியுளன் சிறுகுரங் கெனினும் தானரக்கர் மாய்த்தான்
சங்கை யில்லைநம் சட்டம்போ லிதனைச் சாகவையு மென்றான்
அங்குளோ ரிதனை யாமோதித்திட அவனிளை யோன் சிரித்தான்
—அனுமனோர்-தூ தனென் றுரைத்தான். 231

தேய்ந்த மனமுடன் அரக்கர் செய்தவத் தீர்ப்பை நகைத் திட்டான்
சாந்த மொழிகள்சில வீடணன் தருவான் சத்துவம் தோன்ற வன்றே
'போந்த குரங்கொரு தூ தனென்பதைப் புறக்கணித்து நாமும்
ஈந்த முடிவு பெருங் குற்றம தேயாம் இதனை யுலகு சிரிக்கும்
—தருமம்-நம்மை விட்டுப் பறக்கும்.' 232

'அங்கம் நீக்கியவ னறிவை யழிப்போ மாணவம் போக் கிடுவோம்
பங்க மல்லவோ நம்குலத் திற்கிப் பழிதரும் தூதவதம்
எங்கும் நங்குலம் இழுக்குறு' மென் றவ னெடுத்துச் சொல்ல வரக்கன்
பொங்குங் கோபமது சிறிது தணிந்தே புலனறிந்து சொல்வான். 233

'வதைக்குரி யானிவ் வானரன் பலரின் வாழ்வை முடித் ததனால்
அதற்கொரு தடையிலை யாயினு மிவனை யறிந்தனம் தூத னென்றே
மதிப்பொடு வழகும் பெருமை சேர்க்குமம் மந்தியின் வாலதனைச்
சிதைத்திடும் பின்னே யவனை யேவியவர் சிறுமையுற்றுத் தாழ்வார்
—அவர்நல்-லறிவு பெற்று வாழ்வார்'. 234

' தீயிடுங் களவன் வாலி ' லென் றுவத் தீயவன் தீர்ப் பிட்டான்
போய பிரமனது கட்டை வாங்கினன் பொலியு மிந்த்ர சித்தன்
பேயென வரக்கர் ஆர்ப்ப ரித்துப்பின் பெரியகயி று கொண்டே
தூய வாலுடன் துணிகள் சேர்த்ததைத் துணிந்து கட்ட லானுர்
—சேதி சிலர்-சீதைக் கெட்டப் போனுர். 235

## அத்தியாயம்—21

[இந்த அத்தியாயத்தில் அனுமனுக்குத் தீயினல் தீமையுண்டாகாதபடி தாய் தீக்கடவுளை வேண்டவும், வாலிலுள்ள தீயைக்கொண்டு அனுமன் இலங்கையின் பலவிடங் களையும் எரித்தலும் கூறப்படுகின்றன.]

(ராகம்-பந்துவராளி)

கூட்டங் கூட்டமா யரக்கர் சூழ்ந்தனர் கொண்ட குரங்கு காண
வாட்டி யதனையவர் களிக்க வேண்டியதன் வாலி லெண்ணெய் பெய்தார்
ஓட்ட மாயிதனைச் சென்ற வரக்கியர் ஓதிடலும் சீதை
கேட்டன ளதனுல் உயிர்பி ரிந்ததெனக் கேவி துக்கங் கொண்டாள்
—எரியை யவள்-ஏவ எண்ணங் கொண்டாள். 236

' என்னுயிர் தந்துபின் னெனது நாயகன் எழி லுரைத்த வனுமன்
இன்ன லுற்றனன் இமையவ ர்க்குதவ நின்றருளும் தீயே!
மன்ன வர்க்கவர் மனங் குளிர்ந்திடவும் மாசிலாத பணிகள்
சொன்ன வாறுநான் செய்தவ ளாயின் சோகம் தந்திடாயே
—எரியும் நீ-அவனை வெந்திடாயே.' 237

' ஒன் று தாரமே கொண்டு நாயகன் உள்ள துண்மை யாயின்
அன்று அண்ணலே உன்தன் சாட்சியா யடைந்த துண்மை யாயின்
சென்ற நாளில்நான் செய்த புண்ணியம் சிறிதி ருக்கு மாயின்
இன்று வானரற் கங்கி தேவனே! இசைந்து குளிர வேண்டும்
—என்மனம்-அறிந்து அருளல் வேண்டும்.' 238

அங்கு வாலில்தீ யரக்கர் கூட்டமா யார்ப்பரித்து வைத்தார்
தங்கு மவ்வழல் தாமரையோவெனத் தண்மை தரக் கண்டான்
' சங்கை யில்லைநம் அன்னை யருளதே சந்தன மாய தழல்
எங்குங் கண்டுபின் னெரியுமிவ் வழலை யிலங்கைக் கேவிச் செல்வேன்
—பலர்-ஆவி கலங்கச் செய்வேன்.'
என எண்ணி யனுமன் பொறுத்தான்—அரக்கர்பலர்
நண்ணி யவனை யொறுத்தார். ஸ்ரீராம ராம் ராம். 239

பெரிய வர்களொடு மங்கை பாலரும் பெயர்ந்து கூட்டமானுர்
தெரிய விலங்கை யெங்கு மனுமனைத் திரியவைத் திழுத்தார்

அறிய வேண்டுமவ் வூரமைப்புகளை யறிந்த பின்ன ரனுமன்
உருவு சிறுத்தொரு கணமதில் பிணைகளை யுதறி வீழ்த்தி விட்டான்
—புகை-சூழவானைத் தொட்டான். 240

ஓங்கி நின்றதொரு கோபுரம் தாவினன் ஒளிவிடும் பானுவென—அதைத்
தாங்கி நின்றபெரும் தம்பம் பெயர்த்தே தாவின னரக்க ரிடை
ஆங்கு நின்றதைச் சுழற்றிட வரக்கர் அலறி ஓடலானர்
நீங்கி வாலினின் றெரியு மாடைகள் நிலம்விழ அரவெனவே
—அமரர்விடு-நிலைகொளும் சரமெனவே. 241

வாலைச் சுற்றியவன் வான்திரிந் தவா றழலைக் கக்க வைத்தான்
மாலை மாலையா யங்கி யாலவன் மழையைப் பொழிய வைத்தான்
கோல மானபே ரரக்கர் மாளிகை கூட்டித்தியை யிட்டான்
நீல வானிலவன் நிருதர் புகழினை நின்று எரிய விட்டான்
—நிருதன்வயிறதென்று எரிய விட்டான். 242

ஆடு மாடுபோ லரக்கர் திவிழுந் தலறு மரவம் கேட்டான்
ஓடி யோடிமே லுள்ள விடமெலா முலரத்தியை யிட்டான்
ஈடி லாதவவ் வீடண னில்லை யிசைந்து விட்டு விட்டான்
நாடி யிப்புகழ் காணவா னமரர் நண்ணிக் கூடிவிட்டார்
—அனுமனை-யெண்ணிப் பாட லிட்டார். 243

ஊழி யிறுதியின் உருத்திரன் போலவன் உலவி யிலங்கை தீய்த்தான்
பாழினி யிலங்கை பாவம் செய்ததெனப் பகர வரக்கர் மாய்த்தான்
'வாழி ராகவன் வம்ச' மென்றவன் வாய்விடுத் துரைத்தான்
ஆழி யோரமவந் தணைத்து வாலைத்தன் அன்னை நினைவு கொண்டான்
—அறிவிலா-தன்னை நொந்துகொண்டான். 244

## அத்தியாயம்—22

(ராகம் - பிலஹரி)

[இந்த அத்தியாயத்தில் பிராட்டிக்குத் தீயினல் நலிவில்லை யென்பதை அனுமன் சாரனர் வாயிலாக அறிந்து நேரில் அவளைத் தரிசித்தலும், அனுமன் மீண்டும் கடல்தாவி அங்கதப்படையைச் சந்தித்தலும், அனுமன் வருகையைக்கண்டு அங்கதப்படைகள் அக மகிழ்தலும் கூறப்படுகின்றன.]

'என்ன வேலை செய்தேன்!'—என வனுமன்
தன்னை நொந்து சொல்வான்
'அன்னை தங்குமிவ் விலங்கை யெரிந்திட
அனலை மூட்டினேனே!' 245

'உயிருட னுள்ளனளோ?—இலை யவள்
உலர்ந்துடல் வெந்தனளோ?
பயலிலை யென்னுயிர் பாவமி தன்மேல்
பாரிலேது முளதோ?
—நான்-வாழ வகையு முளதோ? 246

என்ற வாறனுமன் ஏங்கித் துடிக்கையில் எரியும் வானில் கண்டான்
சென்ற சாரணர் இருவர் பேசியதைச் செவிமடுத்துக்கேட்டான்
'நின்ற சோகவனம் நாயகி யாரிடம் நீங்கலாக விலங்கை
தின்று வானெழுந் தெங்கு மெரியும்தீ திகழும் காட்சி' யென்றார்
—தேவியின்-உயிர்க்குச் சாட்சி நின்றார். 247

அம்மொழி யதுகேட்டான்—அனுமனும்
விம்மிக் களித் திட்டான்
அம்மையைத் தானே கண்டு வருவதென
அவன்மனம் கொண்டிட்டான். 248

வானெழுந்து பாய்ந்தான்—வனமதில்
தான்மகிழ்ந்து கண்டான்—தேவியை
"ஊன மில்லையினி யென்பணி" யென்றான்
உயர்ந்து வான் வளர்ந்தான்
—ஜய மாருதி ராம் ராம் 249

'காலம் போக்காது கடலைக் கடந்துபின் கவிகளைச் சேர்ந் திடுவேன்
சீல மோடுமிங் கின்னல் சகித்திடும் சீதை மீட்க வையன்
வேலை தாண்டிப்பெரும் படையொடு வந்திட வேண்டும் வழிகள்
[செய்வேன்' என
நீல வானிலவன் ராகவ னுளதிசை நினைந்து திரும்ப லுற்றான்.
—அன்னை கற்பி னேம்ப லுற்றான் 250

அங்கி லங்கையில் அரிட்ட மென்றபே ரமுகுமலை கண்டான்
தங்கி யதனைத்தன் தாள்பட வழுத்தித் தாவிவா னெழுந்தான்
எங்கு மிலங்கை யிடிமுழங்க வவன் எழும்பி வான் பறந்தான்
மங்கை கண்டதோர் பேறு பெற்றதால் மகிழ்ச்சிகொண்டு செல்வான்
—ராகவன்-மனங்களிக்கச் செய்வான். 251

வண்ண மலர்கள் வானி ருந்தமரர் வரையிலாது பொழிந்தார்
உண்ண வருவதுபோல் உள்ள மேகமழை யுதிரக் கிழித் திடுவான்
எண்ண மோடுமனம் செல்லு மாறவன் எளிதில் தாவிச்சென்றான்
நண்ணும் சூரியனும் நக்ஷத் ரங்களும் நாண வான் பறந்தான்
—அவை-ஒதுங்கத்தா னுராய்ந்தான். 252

ஒருசிறு போழ்தினில் எல்லை யற்றகடல் ஓயத் தாவிவிட்டான்
குறுக மஹேந்திர மலையதை யனுமன் குளிர்ந்து கண்டுவிட்டான்
பெருகு மாவலுடன் வரவு பார்த் துளோர் பெறவவன் கர்ச்சித்தான்
அருகு வானிலவ் வனுமன் வருவதை யங்கதப் படை கண்டார்
—சென்றபணி-செயமென மனங் கொண்டார். 253

மரத்தி லேறிசிலர் மலையில் நின்று பலர் மாருதி வரக் கண்டார்
உரத்துக் கூவினர் வருமனு மனைக்கண் டுளமகிழ்ந்து குதித்தார்
புறத்துச் சாம்பவா னங்கதன் முதலோர் புகழ்ந்து வரவு சொன்னார்
அறத்து ளாளைக்கண் டகமகிழ்ந் துவரும் அனும னவர்முன் குதித்தான்
—தரை-யதிர்ந்திட மலை மிதித்தான். 254

'தேவியைக் கண்ணால்கண்டேன் தேவியின் முடிமணி கொணர்ந் திட்டேன்
ஆவி பிடித்தவள் அழகன் வரவுபார்த் தங்கு வாடுகின்றாள்
யாவரு முடனே சென்றித னைநம் மரசர் கேட்கச் சொல்வோம்'—என
ஏவ அங்கதன் எழுந்தனர் படையோர் எக்களித்துச் சென்றார்
—எக்கமதை-மிக்க களித்து வென்றார். 255

வான் கிளம்பமன் வழியில் கூச்சலொடு வன மழித்துச் சென்றார்
வான ளாவப் புகழ் வாயு மகனுக்கவர் வாய்விடுத் துரைத்தார்
போன விவரமொடு பொன்னியை யனுமன் புகழ்ந்து கண்ட விதமும்
கான் வழிக்கிடை கவிகள் கேட்கவவன் கதையைச் சொல்ல லானான்
—களிப்போ-டதனைக் கேட்கலானார். 256

## அத்தியாயம்—23

[இந்த அத்தியாயத்தில் அனுமன் இலங்கையில் நடந்த வரலாற்றை அங்கதப் படைகளிடம் விரித்துக் கூறல் சொல்லப்படுகின்றது.]

(ராகம்-ஷண்முகப்ரியா)

"அன்றும தருள்கொண்டேன்—வானதில்
சென்று பறந்திடச் சேர்ந்த தடை
ஐயன தருள்கொண்டே—அவைகளை
நையச் செய்து பின் நகர் புகுந்தேன். 257

லங்கிணி காவலதை—நகர்தனில்
மங்க வீழ்த்திப்பின் மனைக ளெல்லாம்
எங்கும் தேட லுற்றேன்—அங்நகர்
தங்கக் கண்டனன் தனியெழிலே. ஸ்ரீராம ராம் ராம் 258

அன்னையைக் காணமல்—அலைந்துதொழ
என்னெதிர் கண்டேன் எழில்சோலை
ஆங்கு தங்கக் கண்டேன்—உலகினில்
ஓங்கு கற்பெனும் ஓவியமே. 259

அவளற மென் சொல்தேன் !—ஐயனது
தவமது கொல்லோ தாம் மணந்தார்
கற்புப் பேணி நிற்பாள்—அரக்கரோர்
அற்ப மென்றிகழ்ந் தவமதிப்பாள். ஸ்ரீராம ராம் ராம் 260

மாத மொன்றி லேயன்—வந்துதன்
வேதனை தீர்த்திட வேண்டி நின்ருள்
முடிமணி தந்திட்டாள்—அவளிடம்
விடைபெற் றவ்வனம் விரைந் தழித்தேன். 261

ஐயன் பெயரைக் கூவி—அழித்தவெனை
வைது வீரர்பலர் வெருட்டி வந்தார்
வீரப் போர் புரிந்தார்—அவர்களை
நேரி லெமபுரம் நின் ருெழித்தேன். ஸ்ரீராம ராம் ராம் 262

அரசன் மைந்த ஞெருவன்—அமரரை
இறக்க வாட்டுமவ் விளைஞன் வந்தான்
இந்திர சித்த னென்பான்—என்னையொரு
மந்திர மலரவன் வாளியினுல் 263

பிணைத்துக் கட்டிவிட்டான்—பிறிதுளோர்
அணைத்துக் கயிறுகொண் டெனைப்பிணித்தார்
கட்டை விட்டு நின்றேன்—கண்டிலர்
மட்டிலா தரக்கர் மனமகிழ்ந்தார். ஸ்ரீராம ராம் ராம் 264

அரக்கன் காண வென்னை—அழைத்தவர்
இரைத்துச் சென்றனர் இலங்கக் கண்டேன்
சீரும் செல்வ முடனே—ராவணன்
பேரும் புகழும்பெருந் தவ பலமும். 265

உண்மை யெடுத்துச் சொன்னேன்—உத்தமியை
அன்ன லடிபணிந் தளித்திடவே
காம மேறி நின்ருர்—காதுகளில்
நேம மானமொழி நின்றிடுமோ ? ஸ்ரீராம ராம் ராம் 266

'இவனைக் கொல்லு' மென்ருன்—இளையோன்
தவமொழி பலபல தடுத்துச் சொன்னுன்
தூதுவந்த இவனைக்—கொல்லுதல்
தீதெனப் பலவும் தெரிந் துரைத்தான். 267

வாலில் தீயை யிட்டே—ராவணன்
'கோலங் காட்டியிதைக் கொளுத்து' மென்ருன்
துணிகள் சுற்றி வாலில்—தீயிடவும்
பிணைக ளுதறிநான் பெயர்ந் தெழுந்தேன். 268

தீயுங் குளிரக் கண்டேன்—அதுவுமத்
தாயி னருளெனத் தானறிந்தேன்
நகரில் தீயை வைத்தேன்—அரக்கரை
நலியச் செய்தவர் நக ரழித்தேன். 269

அன்னையைத் தீண்டியதோ—தீயெனவே
முன்னை கொண்டதொரு மோகம் விட்டேன்
அடுத்துக் கடலைக் கடந்தேன்—உங்களை
விடுத்துச் சென்றபின் விளைந்த திவை.'' ஸ்ரீராம ராம் ராம் 270

## அத்தியாயம்—24

**[இந்த அத்தியாயத்தில் அங்கதன் ஏவலால் அனுமன் முதலியோர் மதுவனத்தை யழித்தலும், அனுமன், ஐயனையும் அரசனையும் தண்டனிட்டுப் பிராட்டியின் நிலையையும் அவள் கூறிய பல மொழிகளையுங் கூறிச் சூளாமணியை யளித்தலும் கூறப்படுகின்றன]**

**(ராகம் - பைரவி)**

பாடி வரும்கவி கண்டன ராங்கே பசுந்தேன் சோலையதை
ஆடிக் களித்தே அம்மது உண்டிட அங்கதன் விடைகேட்டார்
நாடிய செயமதை யெண்ணிக் களித்திட நல்கின னவன் விடையும்
ஓடிக் குடித்தனர் உற்ற காவலரை உதைத்துக் குத்தலானார். 271

நதியென மதுவை யோடவிட் டவர் நகைத்துக் குடிக்கு மதை
ததிமுகன் வந்தே தடுத்திட வவனைத் தாவி யறைந் திட்டார்
மதியிழந் திவர் செய்யு மிழிவுசொல மன்னர் தேடிச் சென்றான்
எதிரில் சென்றுசுக் ரீவனறிந்திட எடுத்துச் சொல்ல லானான். 272

கேட்டிதைச் சுக்ரீவன்—ராகவனின்
வாட்டம் தீரச் சொல்வான். 273

அயர்வு நீங்கிஸ்ரீ ராம னறிந்திட அவரைத் தேற்றிச் சொல்வான்
செயமது கொண்டே வந்துள ரின்றேல் செய்யா ரிச்செயலைப்
பயமிலை யென்றே சொல்லிநீ யவரைப் பரிந்த ழைத்து வாராய்—எனத்
துயரம் தீர்க்கவப் படையுட னனுமன் தூர வருதல் கண்டார். 274

தண்ட னிட்டுவரும் மாருதி ஐயன் தெளியக் கூச்ச லிட்டான்
'கண்டனென் தேவியை' யென்று னுலகோர் கவலை போக்க வந்தான்
அண்டி ராகவன் அடிபணிந் துதன் அரசனையும் பணிவான்
கண்டி லங்கையுள திசை பணிந்துதன் கண்க லங்கிச் சொல்வான் 275
—ஐய ஸ்ரீராம ராம் ராம்

அன்னையைக் கண்டே னழுதி ளைத்ததோர் அழகி னெல்லை கண்டேன்!
பொன்னி யோடுமிப் பூமி நாணுமொரு பொறையி னெல்லை கண்டேன்!

கன்னியர் பேணும் நாண மோடுமடம் கற்பி னெல்லை கண்டேன்!
புண்ணிய மெல்லாம் ஒருரு வாயவள் பொலியு மெழில் கண்டேன்!
—அசோகப் பொழிலி லன்று கண்டேன். 276

அமுதெனக் கேட்டே யனும னுரைதன்னை யசைவி லாதுநின்ருன்
குமுத மெனமுகம் பூத்திட வையன் கொந்தளித்து மகிழ்வான்
அமைதி யோடணங் கின்ன லுறுதலை யறிவு கொண்டு நலிவான்
இமைகள் மூடிநீர் வழிய மேலுமுரை யிசைந்து கேட்க லானுன்
—நிகழ்ந்ததை—அனும னுரைக்க லானுன், 277

உணவ தாகஉம் நாம மதனையே உண்டு உயிர் பிடிப்பாள்
துணையி லாததோர் நிலையி லு மரக்கர் துச்சமென் றுரைப்பாள்
உணர்வி னேடுமவள் உயிர ளித்ததும் உமது மோதிரம்தான்
இணையி லாததன் முடிமணி யுமக்கே இங்க னுப்பி யுள்ளாள்
—மேலும்பல-மொழிகள் செப்பி யுள்ளாள். 278

'பேதை யபலைகளைக் காப்பதுவும் மணம்பெற்ற வாண்கள் கடனும்
நாதி யற்றதோர் மகனைக் காப்பதும் நகர மன்னன் கடனும்
சீதை யென்றதம் மனையை மீட்டிடச் சிந்தியா திருத்தல்
நீதி யாகுமோ?' என்றென தன்னை நேரில் கேட்கச் சொன்னுள்
—அவள் தன்-சிறையை மீட்கச் சொன்னுள். 279

'அற்ப மானதோர் புலலெ டுத்துநீர் அசுரன் கண்ணி லொன்றைக்
கற்பு மங்கையைக் கண்ட தாலவன் கதறப் போக்கி நின்றீர்
சொற்ப மில்லையிவ் வரக்கர் தந்திடும் சோக மென்று கண்டும்
விற்பி டித்துளீர் விரைந்து வந்துமது வீரங் காக்கச்' சொன்னுள்
—தான்படும்-இன்னல் போக்கச் சொன்னுள். 280

'பின்ன வர்க்குமோர் உரைவி டுத்துளாள் மன்னவ ருடன் வந்தே
தன்னை மீட்பதோர் கடன லாததுவும் தரும மென்று' சொன்னுள்
'இளையன் காவலில் இருந்த காலையிவ் விளைவு நேர்ந்த ததனுல்
களைவது மவனது கடனெனச் சிற்றம் காணில் தணியச்' சொன்னுள் 281
—தான்படும்-துயரம் நீக்கச் சொன்னுள்.

மணங்கொள் சீதைகுழல் முடிமணி தந்தே மன்ன னிடம் சொல்வான்
இணங்கி தேவியாங் கின்னு முயிருடன் இருப்பது மாத மென்ருன்
சுணங்கி டாதுபெரும் படையுட னவரைச் சுருக்கச் செல்லச் சொன்னுன்
மனங் குளிர்ந்து மணி கொண்ட ராமனதை மகிழ்ந்து கண்புதைத்தான்
—இளவலும்-—உவந்து கொந்த ளித்தான். 282

நிகழ்ந்த தெலாம்பின் நேரிடை கேட்டான்
மகிழ்ந்தனன்மா ருதியை—மனம்
நெகிழ்ந்து கண்களில் நீர்வழிந் திடப்
புகழ்ந்து பேச லுற்றான்
—மாருதியும்-அவன தாசி பெற்றான். 283

[சுந்தரகாண்டம் முற்றிற்று]

## அத்தியாயம்—25

[இந்த அத்தியாயத்தில் யுத்த காண்டச் சுருக்கமும் ஸ்ரீராம பட்டாபிஷேகமும் கூறப்படுகின்றன.]

(ராகம் - சுரடி)

கவிகள் மன்னன்சுக் ரீவனு மிதனைக் களிப்புப் பொங்கக் கேட்டான்
உவகை யோடுபின் அண்ணலைப் பணிந்தான் உலகிற் காணை யிட்டான்
எவரும் கேட்கப் பறை சாற்ற ஏவினன் எண்திசை களுக் கன்றே
கவிகள் பாலர்முதல் ஆங்கு சேனையில் கடுகிச் சேர வென்றான்
—படையுமுடன் பெருகிச் சேரக் கண்டான். 284

விண்ணி ருந்துமெண் டிசையிருந்தும் பெரும் வீரர் பெருகி வந்தார்
கண்ணி னுமோர் கணக்கி லுட்படாக் கவிகள் வீரர் வந்தார்
அண்ண லாரின்பணி யிலங்கை சென்றுமவ் வரக்க னுவிபோக்கிப்
புண்ணியங் காத்தவர் புகழ்வ ளர்ப்பதெனப் புனித வாணை யிட்டார்
உடனே—அதற்கெனப் புறப்பட்டார். 285

எங்கும் வந்தகி டண்ணே ராகவன் ஏற்று மகிழ்ந் திட்டான்
ஓங்கு சேனை கடல் சேரவழி யவர்க் குதவப் பணிந்திட்டான்
நீங்க வக்கடல் கருவம் ராகவன் நினைத்து வில்லைத் தொட்டான்
ஆங்கு கடலும்செல வழிவிடுத்துவந் தையன் பாதம் தொட்டான்
—தன்பிழை-பொறுத்திட வேண்டிட்டான். 286

தங்கி டாதுசெலப் படைகளும் கடலைத் தடுத்துப்பால மிட்டார்
பொங்கிச் சூழும்க் கடலென விலங்கை புறத்துச் சூழ்ந்து விட்டார்
அங்க தனைப்பின் தேர்ந்த ரக்கனுக் கரசன் தூது விட்டான்—ராவணன்
'சங்கை யில்லைபோர்' என்றன னருகுள சாவைமறந் திட்டான்
—அவன்-போரில் முனைந்திட்டான். 287

சரியென வானரர் அணி வகுத்தனர்
பெரிய போரைச் செய்தார்
கருகி யுலகெலாம் கண்ட தூழியெனக்
கலக்கங் கொண்ட தாங்கே. 288

அம்புவி யென்றும் கண்டி சாதபோ ரவர்கள் நிகழ்த் திட்டார்
தம்பி யாற்றலதைக் கண்டு வானவர் தம்மை மறந்திட்டார்
கும்ப கர்ணனொடு விந்திர சித்தும் குலைய வில்லைத் தொட்டார்
வெம்பிப் போரிடை வந்தராவணனை வென்று மாய்த்து விட்டார்

—மூலபலம்-நின்று தேய்த்துவிட்டார்.

ஸ்ரீராம ராம் ராம் 289

வருக்க மோடுமந் நிருதர் கூட்டமதன் வலிவைப் போக்கி விட்டார்
எரிக்கும் தீயுமாங் கன்னை தூய்மையை எடுத்துக் காட்டி விட்டார்
குறுக்கி லாதுமகிழ்ந் தன்னையை ராகவன் கூடி மகிழ்ந்திட்டார்
இருக்க வீடணனை என்று மரசனு யிலங்கைப் பட்ட மிட்டார்

—தமதுநகர்-செல்லப் புறப்பட்டார். 290

அழகி யோடழகன் ராகவனும்பின் ஆங்குள வானரரும்
அழகு புட்பகம் ஏறி வான்வழியி லன்று புறப்பட்டார்
வழியில் கடலைத்தாம் கட்டிய வணையும் வந்த வீசனருளும்
கழுகு முயிரிழந் தவரிடம் சொல்லிய கதைகள் சொல்லிவந்தார்

—தேவிக்கவர்-காட்சி காட்டிவந்தார். 291

பரத்து வாசர்பரிந் திட்ட விருந்தைப் படையினர் களித் துண்டார்
புறத்து நந்திநகர் துடித்துநிற்குமிதைப் புனித பரதன் கேட்டான்
வருத்தம் தீர்ந்துமந் நகர யோத்தியும் வழியும் சிங்க ரித்தான்
பொருத்த மானபல மங்கள ஒலியுடன் பொன்னியை வரவேற்றான்

—ஸ்ரீராகவன்-தன்னையும் வரவேற்றான். 292

அண்ணலைக் கண்டே பின்னவன் பரதன் அண்டிப் பாதம் வீழ்ந்தான்
தன்னென வவன்மனம் குளிர ராகவனைத் தழுவி மகிழ்ந்திட்டான்
உண்மை யானபெரும் விடுதலை யுருவை உணர்ந்து விம்மி நின்றான்
அண்மையி லையன் முடிசூட்டு விழா அவனும் மேவிவிட்டான்

—நகருளோர்-களித்துக் கூச்சலிட்டார். 293

அன்னை மூவரும் பொங்கி மகிழ்ந்தார் அனுமன் மகிழ்ந்திட்டான்
அந்நக ருள்ளோர் பாலர் விருத்தர் ஆடி மகிழ்ந் திட்டார்
மன்னும் தருமமது ஓங்க வசிட்டன் மகிழ்ந்துநாள் விதித்தார்
தன்னை மறந்தந் நகரு ளோரெலாம் தாவிமேல் குதித்தார்

முடிவிழா—தன்னைப்பா விழைத்தார்—ஸ்ரீராம ராம் ராம். 294

